# ஒவ்வொரு தாயும் தன் குழந்தையின் உணவு பற்றி என்ன அறிய விரும்புகிறார்

## அமுல்ஸ்ப்ரேயில் என்ன கிடைக்கிறது

**கே. என் குழந்தை ஆரோக்கியமாகவும் வலுவுடனும் வளருவதற்குத் தேவையான வைட்டமின்கள், கனிஜ பொருட்கள் மற்றும் புரதங்கள் அமுல்ஸ்ப்ரேயில் உள்ளனவா?**

அமுல்ஸ்ப்ரேயில் பாலில் காணப்படும் எல்லா இயற்கையான சேர்க்கைப் பொருட்களும், கூடவே வைட்டமின்கள் மற்றும் கனிஜ பொருட்களும் உள்ளன.

வைட்டமின்கள் நோய்த் தொற்றை எதிர்க்க, நன்றாக பசி எடுக்க, ஆரோக்கியமான நரம்புகள், ஈறுகள், கண்கள் மற்றும் பற்களுக்கு.

கியாஸின் சீரண சக்தியை வளர்க்க, உடல் உறிஞ்சிக் கொள்ள, மற்றும் ஆரோக்கியமான சருமத்துக்கு. கால்ஷியம், பாஸ்பரஸ் போன்ற கனிஜ சத்துக்கள் எலும்புகள் சீராக அமைய. இரும்புச் சத்து ரத்த அமைப்புக்கு.

புரதம் செல் அமைப்புக்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையானது. அமுல்ஸ்ப்ரேயில் தரமுயர்ந்த புரதங்கள் போதிய அளவில் இருக்கின்றன.

**கே. என் குழந்தையால் அமுல்ஸ்ப்ரேயை சீரணிக்க முடியுமா?**

ஒவ்வொரு சொட்டுப் பாலும் மிக நுண்ணிய பவுடராக மாற்றப்படுகிறது. கொழுப்பும் அவ்வாறே மாற்றப்படுகிறது. இதனால் குழந்தை இதை எளிதில் சீரணிக்க முடிகிறது—பிறந்து சில நாட்களான குழந்தையால் கூடத்தான்.

**கே. அமுல்ஸ்ப்ரேயைத் தயாரிக்க நேரமாகுமா?**

ஸ்ப்ரே-ட்ரை முறையால் தயாரிக்கப்படும் நுண்ணிய பவுடரான அமுல்ஸ்ப்ரே எளிதில் விரைவில் கரைகிறது. இதைத் தயாரிப்பது எளிது. இது பாட்டிலின் நிப்பிள் துவாரத்தில் அடைத்துக் கொள்வதில்லை. எனவே குழந்தை அதிக காற்றை விழுங்குவதில்லை.

**பாலஅமுல் மற்றும் வளரும் குழந்தை**

3-வது மாதத்தில், உங்கள் குழந்தைக்கு அமுல்ஸ்ப்ரேயைத் தவிர, பாலஅமுல் தானிய உணவு தரத் தொடங்குங்கள்.

**அதிக விவரங்கட்கு. இலவசமாக அமுல் குழந்தைப் புத்தகம்**

*அமுல் குழந்தைப் புத்தகத்தை இலவசமாகப் பெற, த.பெ. 10124, பம்பாய் 400 001 என்னும் முகவரிக்கு எழுதுக. 50 பைசா தபால் தலையுடன் உங்கள் முழு முகவரியையும் அனுப்புக.*



## அமுல்ஸ்ப்ரே தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது






விற்பனைக்கு விடுப்போர்: குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

ASP/AS/27

# கல்கி

ராக்ஷஸ ஆவணி 22

செப்டம்பர் 7, 1975

'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே: சம்பவங்களும் கற்பனையே.





பின்னி கூட
என்றும்
மாற்ற விரும்பாத
சில பொருட்கள்
உள்ளன!

## நல்ல வேளை,
## சில பொருட்கள் என்றும் மாறுவதே இல்லை!

இந்த நாட்களில் இயல்பான நிலைகளின் தோற்றத்
தையும் பின்னியின் தரம் என்றும்போல் நம்பிக்கையூட்டு
வதையும் காணும்போது களிப்படைகிறோம்.
பின்னி உயர்ந்த நாகரீகத்தையும் நீடித்த
உழைப்பையும் எப்படி இணைத்துத் தருகிறது
என்பதைப் பாருங்கள். எண்ண முடியா
வண்ணங்கள்! அள்ள முடியா கோலங்கள்!
பின்னி டெரீன் இழை கலந்த
தரமான ஆடைகளை அணிந்து
களிப்படைவீர்.



நாகரீகம், அத்துடன் நீடித்தும்
உழைப்பவை — பின்னி மட்டுமே
நயமுடன் இணைத்துத்தர முடியும்!

**பின்னி** 'டெரீன்' இழைகலந்த துணிகள்

Interpub/BB/55/75 Tam

# ஒரு வெற்றிக் கதை!

அரசுத்துறை நிறுவனங்கள் இன்று ஒரு திரும்பு முனையை அடைந்துள்ளன என்று நம்ப இடம் இருக்கிறது. மொத்தத்தில் முதலீடு ஆகியுள்ள பல கோடி ரூபாய்களுக்கு ஏற்ற லாபத்தை இவை இன்னமும் அடையவில்லை என்றாலும் நிலைமை படிப்படியாக முன்னேறி வருகிறது என்ற அளவுக்கு அரசுத் துறையின் பரம எதிரிகள் கூட ஒப்புக்கொள்வர்.

பல அரசுத் துறைத் தொழிலகங்கள் இன்னமும் சரிவர நடக்கவில்லை என்பது மெய்யேயானாலும் இதை ஈடு கட்டுவதுபோல் வேறு சில திறம்பட இயங்கி இலக்குகளை எட்டி லாபம் அடைந்து வருகின்றன. இவற்றில் தலையாயது பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ்.

எனவே இந்த நிறுவனத்தின் தலைவர் திரு வி. கிருஷ்ணமூர்த்தியை அண்மையில் சென்னை நிர்வாகச் சங்கம் கௌரவித்தது ரொம்பப் பொருத்தமான காரியம்.

'தனியார் துறை நிறுவனம் ஒன்று நஷ்டமடைந்தால் அது ஒரு சில பங்குதாரர்களை மட்டுமே பாதிக்கும். ஆனால் அரசுத் துறை நிறுவனம் ஒன்று நஷ்டம் அடைந்தால் அது நாட்டில் வரி செலுத்தும் ஒவ்வொரு பிரஜையையும் பாதிக்கிறது' என்பார் ராஜாஜி. இந்த நோக்கில் அரசுத் துறைத் தொழிலகங்கள் மிக மிக ஆற்றலுடன் செயல்பட வேண்டியதன் அவசியத்தை எவ்வளவு வலியுறுத்தினாலும் தகும்.


கல்கி

மலர் 35

இதழ் 6





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற • எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


ஒரு நிறுவனம் திறம்பட இயங்குவதும் உருப்படாமல் போவதும் நிர்வாகத்தினரின் கையில்தான் இருக்கிறது. எனவே பல்வேறு தொழிலகங்களின் நிர்வாகிகள் கூடிப் பேசுவதும் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்வதும் நாட்டின் பொருளாதாரச் செழிப்புக்கு மிகுந்த பயன்தர வல்லது. ஆதலால் நிர்வாகிகள் மகாநாடு நடத்திய சென்னை நிர்வாகச் சங்கம் வாழ்த்துக்குரியதாகிறது.

மகாநாட்டினை யொட்டி 'அனந்தராமகிருஷ்ணன் நினைவுச் சொற்பொழிவு' நிகழ்த்திய திரு கிருஷ்ணமூர்த்தி, நிர்வாகத் திறன் பற்றிய பாடப் புத்தக ஆராய்ச்சி செய்யாமல் அனுபவஞானத்தோடு பேசினார். அரை மணி நேரப் பிரசங்கத்தில் ஒவ்வொரு நிமிஷமுமே பயனுள்ளது என்றாலும் நாம் முக்கியமாகச் சிலவற்றை மட்டும் கவனிப்போம்.

'அபரிமிதமாகச் செல்வத்தைப் பெருக்கிவிட்டு அதன் உடன் விளைவுகளான பல மனநோய்களுக்கு மக்களை உள்ளாக்கும் மேற்கத்திய பாணிப் பொருளாதாரமும் நமக்கு வேண்டாம்; அனைத்தையும் அரசுடைமையாக்கிக் கட்டாய வேலை வாங்கும் கம்யூனிஸக் கோட்பாடும் வேண்டாம். இவற்றிலிருந்து நல்லனவற்றை மட்டும் நாம் எடுத்துக்கொள்வோம்' என்றார் கிருஷ்ணமூர்த்தி. 'அத்துடன் நமது பரம்பரைச் சம்பிரதாயங்களில் உள்ள சிறந்த அம்சங்களை இணைப்போம். அந்தச் சம்பிரதாயங்களில் உள்ள வேண்டாத விஷயங்களைத் தாட்சிண்யமின்றி ஒதுக்குவோம்.'

இதற்கு இரு உதாரணங்களையும் அவர் தந்தார். 'இன்றைக்குச் சுற்றுச் சூழலைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியம் பெரிதும் உணரப்பட்டுப் பல்கலைக் கழகங்களில் பட்டப் படிப்புக்கு உரிய பாடமாகவே விளங்குகிறது. இத்தருணத்தில்தான் கழிவுப் பொருள்களை உரமாக்கிப் பயன்தரும் விதத்தில் மறையச் செய்த நமது பண்டைய விவேகம் முன்னெப்போதையும் விட முக்கியத்துவம் பெறுகிறது.'

இவ்விதம் நமது சம்பிரதாயங்களுள் ஒன்றினைப் போற்றியவர் வேறு ஒரு விஷயத்தில் சம்பிரதாயப் போக்கு இடையூறாக இருப்பதையும் எடுத்துக் காட்டினார்: 'நிர்வாகப் பொறுப்புக்கள் திறமையை மட்டும் கருதாமல், மூத்தவர் — இளையவர், உறவினர்— அல்லாதவர் என்ற போக்கில் ஒப்படைக்கப்படுவது தொழில் வளர்ச்சிக்குப் பெரிய முட்டுக்கட்டை.'

திரு கிருஷ்ணமூர்த்தி திருச்சி பாய்லர் தொழிலகத்தில் சேர்ந்தபோது பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் ஸ்தாபனம் தட்டுத் தடுமாறிக்

கொண்டிருந்தது. கிருஷ்ணமூர்த்தியின் பதவி உயர்வுடன் அந்த நிறுவனமும் ஸ்திரத் தன்மையும் வளர்ச்சியும் பெற்று நல்ல லாபமும் அடைந்தது. உள்நாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்ததுடன் இன்று உலகச் சந்தையில் வேறு பல முன்னேற்றமடைந்த நாடுகளுடன் போட்டி போட்டு வெற்றிக்கொடி நாட்டி வருகிறது.

மின் உற்பத்திக்கான உபகரணங்கள் மட்டுமின்றி, இன்று அத்தியாவசியத் தேவையாகி விட்ட, பூமியின் ஆழத்திலிருந்து எண்ணெய் குடைந்தெடுக்கும் கருவிகளையும் தயாரித்து வருகிறது. இவை பார்க்கப் பிரும்மாண்டமானவை; அதே சமயம் மிக நுணுக்கமானவை. உலகில் விரல் விட்டு எண்ணக் கூடிய ஒருசில நாடுகளே இவற்றைத் தயாரிக்கின்றன.

இந்த அரிய சாதனைகள் எப்படி நிகழ்ந்தன? பத்மஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி விளக்கினார் :

'நிர்வாகம் என்பது முக்கியமாக மனத்தத்துவ ரீதியில் அணுக வேண்டிய ஒன்று. தொழிலகத்தில் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற மனப்பான்மை அடியோடு மறைந்துவிடவேண்டும். தொழிலாளியும் அதிகாரியும் சரிசமமாகப் பழகினால் அதிசயிக்கத் தக்க ஆரோக்கியமான மாறுதல்கள் உண்டாகும். பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் நிறுவனத்தில் நிர்வாகம் – தொழிலாளர் சச்சரவு, வேலைநிறுத்தம் போன்ற ஏதும் இல்லாமல் இருப்பதற்கு இது ஒரு முக்கிய காரணம். தொழிலாளி ஒவ்வொருவனும் நிறுவனத்தின் முன்னேற்றத்திலும் அதன் மூலம் நாட்டின் வளர்ச்சியிலும் தனக்கு ஒரு சிறப்புப் பங்கு உண்டு என உணர்கிறான்.'

இத்தனை ஆண்டுகள் வேலை செய்தபிறகு உத்தியோக உயர்வு என்ற சம்பிரதாயப் போக்கை மாற்றித் திறமைக்கு உடனே வெகுமதி என்ற கொள்கையை அமுலாக்கியது மற்றொரு சிறப்பு.

இதெல்லாவற்றையும் விட வெற்றிக் கதையின் மையக் கரு ஒன்று உண்டு. ஏதோ சில பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழிலகமாக மட்டும் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸை வைத்திராமல் ஒரு பொறியியல் ஸ்தாபனமாக அதனைக் கிருஷ்ணமூர்த்தி மாற்றியமைத்தார். பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் இன்று






## ஊக்கமது கைவிடேல்!

சோம்பி இருந்த ஒருவனை வேலை செய்யச் செய்வதோ அல்லது முன்பு செய்து கொண்டிருந்ததைவிட அதிகமான காரியங்களை நிறைவேற்ற வைப்பதோ அல்லது முன்னைக் காட்டிலும் அதிக காலத்துக்குப் பணியாற்றச் செய்வதோ இரு விதங்களில் நடக்கக் கூடும். கட்டாயப்படுத்துவது ஒரு முறை. மற்றது அவனைத் தானாகவே ஆசைப்பட்டுச் சுதந்திர உணர்வுடன் அதிக வேலை செய்யுமாறு தூண்டுவது. இதற்கு ஊக்கமளித்தல் என்று பெயர்.

இது வெளியே இருந்து வருகிற ஒன்றுதான். ஆனால் இதில் கட்டாயப்படுத்துதலில் உள்ள நோவு அல்லது நோவு பற்றிய பயம் கிடையாது. ஊக்கமளித்தல் என்பது ஒருவனது மனத்திலே வேலை செய்து அவனை மேலும் அதிகமாகவும் கருத்துடனும் உழைக்குமாறு தூண்டுகிறது. சிருஷ்டிச் சூழலை உருவாக்கி மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது. ஆனால் கட்டாயத்துக்குக் கீழ்ப்படியும்போதோ ஒருவன் அதனுடன் விளைவான அடிமை மனப்பான்மையைப் பெறுகிறான்.

சுயராஜ்யா, ஆகஸ்டு 24, 1963

மின் உற்பத்தி உபகரணங்களைத் தயாரிக்கிறது. அதுமட்டுமல்ல, அவற்றை வேண்டுவோருக்கு வேண்டுமிடத்தில் நிறுவித் தருகிறது. நிறுவிய பின் அதனை நன்கு இயக்க நுணுக்கங்களைக் கற்றுத் தருகிறது. சிக்கல் ஏதும் ஏற்பட்டால் தன் நிபுணர்களை உடனே அனுப்பி உதவுகிறது.

எதிர்காலத்தைப் பற்றியும் யோசித்து அணுமின் நிலையங்களுக்கான உபகரணங்களைத் தயாரிக்க இன்றே விரிவான திட்டம் வகுத்துச் செயல்பட ஆரம்பித்து விட்டது பி.எச்.இ.எல்.

கிருஷ்ணமூர்த்தியின் இந்த வெற்றிக் கதை, பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸின் இந்த முன்னேற்றக் கதை, பாரதம் முழுவதிலும் அரசுத் துறையிலும் தனியார் துறையிலும் உள்ள எத்தனையோ பல சிறிய பெரிய தொழிலகங்களுக்கு வழிகாட்டியாகத் திகழட்டும்.

# என்ன சேதி?

### பாரதி போற்றுதும்!
### பாரதி போற்றுதும்!

அமரர் கல்கி அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட பாரதியார் சங்கம் இன்று தொழிலதிபர் என். மகாலிங்கம் தலைமையில் இயங்கி வருகிறது என்று சொன்னால் போதும், சிறப்புப் பணிகள் நிச்சயம் ஆற்றும் என உணரலாம். அவற்றுள் முக்கியமானது தமிழகத் தலைநகரில் தாகூர் — பாரதி பெயர்களால் அழகும் கம்பீரமும் மிக்க அரங்கம் உருவாக மேற்கொண்டுள்ள முயற்சி. இதற்கு ஆதரவு தரும் வகையில் தமிழக அரசு நகரின் மையமான இடத்தில் தாராளமாக நிலம் ஒதுக்கியுள்ளது.

இதற்கு நன்றியும் வாழ்த்தும் தெரிவிக்கும் முறையில் இம்மாதம் 10, 11 தேதிகளில் நடக்கவிருக்கும் பாரதியார் விழாவில் முதலமைச்சரைச் சங்கம் கௌரவிப்பது மிகப் பொருத்தமே. முதல் நாளன்று நடக்கும் இந்த வைபவத்தைத் தொடர்ந்து கலைஞர் சொற்பெருக்காற்றப் போகிறார். அடுத்தாற்போல் திரு ம. பொ. சி. யின் சொல்மாரி.

மயிலை சாயி கலாமண்டபத்தில் நடக்கும் விழாவில் இரண்டாம் நாளன்று பாரதி பாட்டு, கட்டுரைப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவியர் பிரதம நீதிபதி திரு வீராசாமி அவர்கள் கரத்தால் பரிசு பெறும் பாக்கியத்தை அடைகின்றனர். அடுத்து அவ்வை நடராஜன், தீபம் பார்த்தசாரதி, சிலம்பொலி செல்லப்பன் ஆகியோர் பாரதியின் இலக்கிய நயங்களை நமக்கு விண்டுரைக்கப் போகின்றனர். கலை நிகழ்ச்சிகளும் உண்டு. கேட்டு, பார்த்து மகிழ்வோம். பாரதியார் சங்கத்தின் புதிய காரியதரிசி பகீரதனின் பொறுப்பில் சங்கம் தன் பணிகளைத் துரிதமாக நிறைவேற்ற வாழ்த்துவோம்.

### முத்தமிழுக்கு முத்து விழா!

திரு நாரண துரைக்கண்ணன் (ஜீவா) அவர்களுக்கு எழுபது பிராயம் நிரம்பிவிட்டது என்பதை நம்புவதே கஷ்டமாக இருக்கிறது. அவரது நாவல்களின் கதாநாயகர்கள் போலவே அவர் என்றும் இளமையுடன் இருக்கவேண்டும்; எழுதி எழுதித் தள்ளவேண்டும் என்பது நமது ஆசை. ஆனால் எழிலார்ந்த முறையில் முதுமையை ஏற்பதென்பதும் ஒரு கலைதான். அந்தக் கலையில் திரு ஜீவா கைதேர்ந்தவர்.

தேசபக்தியும் தெய்வபக்தியும் பூண்டு பிரசண்ட விகடன், ஆனந்த போதினி சஞ்சிகைகளின் ஆசிரியராக அடக்கத்துடன் பணிபுரிந்து பத்திரிகை உலக ஜாம்பவானாகத் திகழ்கிறார் திரு ஜீவா. எழுத்துலகில் அரை நூற்றாண்டு காலம் உழைத்துள்ள இவர் 127 நூல்கள் எழுதியுள்ளார் என்பதே மலைக்க வைக்கும் செய்தி. அத்துடன் ''உயிரோவியம்'' நாவல் மட்டுமே அறுபதாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்றுள்ளது என்பது திகைக்க வைக்கும்; அவரது எழுத்தாற்றலை எண்ணவும் வைக்கும்.

முத்து விழாக் காணும் முதுபெரும் எழுத்தாளரை வாழ்த்தி வணங்குகிறோம்.

# சமையலுக்குப் பெருந்துணை

ஓய்வில்லா தாய்மார்கள் சுவையான சமையல் செய்ய சுலபமான வழி! இந்த 3 பெருந்துணைகளைப் பின்பற்றி, பல்வேறு இன்பமூட்டும் தின்பண்டங்களைத் தயாரித்து மகிழுங்கள்!......

## பிரவுன் & போல்ஸன்




**பிரவுன் & போல்ஸன்**
கார்ன்ஃப்ளவர்

கபாப், சமோசா, பட்டீஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவுகிறது.

**பிரவுன் & போல்ஸன்**
வெரய்ட்டி
கஸ்டர்டு பவுடர்

6 இனிமையான சுவை வகைகள்! குடும்பத்தினரை மகிழ்விக்க பலூதா, பாயசம், ரபடி ஆகிய பல்வேறு இன்சுவையுள்ள பண்டங்கள் தயாரிக்க சாலச் சிறந்தது.







**ரெக்ஸ்**
பேகிங் பவுடர்

கேக், பிஸ்கோத்து, பகோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதிமென்மையாகத் தயாரிக்க உதவுகிறது. சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது!

உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க
உயர்ந்த சாமானேயே உபயோகியுங்கள்
**பிரவுன் & போல்ஸன்** மற்றும் **ரெக்ஸ்**
தரமுயர்ந்த தயாரிப்புகள்
அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு
பக்குவப்படுத்தப்பட்டவை—கிடைப்பனவற்றிலேயே சிறந்தவை.



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா)**
**பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி மார்க்,
பம்பாய் 400 031.

OBM 3886 TM

# உங்கள் குறைவும் என் நிறைவும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

2

உபந்நியாசம் பண்ணுகிறோம். இன்னும் பல நினைவுகளில் தத்துவங்களை, தர்மங்களைப் பிரசாரம் பண்ணுகிறோம். ஆனால் இவற்றையெல்லாம் தாற்காலிகமான ஓர் உற்சாகம் தான் ஏற்படுமே ஒழிய, ஸ்திரமான மாறுபாடு நடக்காது என்பதுதான் என் அபிப்பிராயம். உபந்நியாசத்தினாலே ஏதோ கொஞ்சம் மாறுதல் சில ஜனங்கள் மனசில் ஏற்பட்டிருந்தால், அதுகூடப் போகப் போகத் தேய்ந்துதான் போகலாமே யொழிய வளருவதற்கில்லை. ஆனபடியால், இவ்வளவு நேரம் பேசியவர்கள் என் உபந்நியாசத்திலிருந்து இதுவரை ஜனங்கள் எடுத்துக் கொண்டது போதாது; இனிமேலாவது இன்னும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னது நடைமுறைக்கு நேரெதிரானது. இதுவரை எடுத்துக் கொண்டது இனிமேல் குறையலாமே ஒழிய, ஜாஸ்தியாகிறதற்கில்லை—வெறும் உபந்நியாசம் என்று வைத்துக்கொண்டால். உபந்நியாசம் முடிந்தவுடன், சாஸ்திர வழியில் அது உண்டாக்கின ஊக்கமும் கொஞ்சம் கொஞ்சமாக முடிந்து விடும். ஆகையினாலே, உபந்நியாசம் பண்ணி உலகத்தை மாற்றிவிடலாம் என்று நான் எதிர்பார்த்திருந்தால் அது தப்பு. இதுவரைக்கும் இந்த உபந்யாசங்களால் ஏதாவது துளி உங்களுக்கு என்னவானது கூட, போகப் போகப் பிசுபிசுவென்று போய்விடுமோ என்கிற ஸ்திதியில் "இத்தனை நாள் நாம் ஸ்வாமிகளின் உபந்நியாசப்படி முழுக்கச் செய்யவில்லை; கொஞ்சம் கொஞ்சம் செய்ததை இனிமேல் முழுக்கவாகச் செய்ய வேண்டும்" என்று நீங்கள் சொல்வது எனக்கு அவமானம்தான்.

நல்லதற்கு இல்லாமல் இப்போது லோகத்தில் பல பழக்கங்கள் வந்து விட்டன. தர்மத்துக்கு மாறுதலாக, கெடுதலாக, அநேக சமாச்சாரங்கள் நமது தேசத்து ஜனங்களிடம் வந்து சேர்ந்து விட்டன. இந்தப் பழக்கங்களை மாற்றினால்தான் அவர்களுக்கே நல்லது. இதெல்லாம் வாஸ்தவம். ஆனால் எப்படி மாற்றுவது? இந்தக் காரியம் ஒருநாளும் உபந்நியாசத்தினால் ஆகாது. பின், எதனால் ஆகும்? ஆத்ம சக்தியினால்தான் ஆகும்.

சரி. அது என்ன சக்தி? அது எப்படி வேலை செய்யும்? ஏதாவது மந்திரம் போட்டு மனசை மாற்றுகிற காரியமா? வசியம் பண்ணுவதா? இதெல்லாமில்லை. வேறு என்ன என்றால், இதுவரையில் லோகத்தில் வந்த பெரியவர்களைப் பார்க்கலாம். மத ஸ்தாபகர்களைத்தான் சொல்லுகிறேன். உலகத்தில் ஒரு பகுதியில் அநேக மநுஷ்யர்களின் வாழ்க்கை முறையையே மாற்றி வேறு நினைசாகக் கொண்டு வந்த அந்தப் பெரியவர்கள் இதை எப்படிச் செய்தார்கள்? 'ஜனங்களுடைய பழக்கங்களெல்லாம் நல்லபடி ஆக வேண்டும். அவர்கள் எல்லாம் நல்ல க்ஷேமத்தை அடைய வேண்டும்' என்ற எண்ணம் அவர்களுக்குச் சதா இருந்தது. பூரணமாக இருந்தது. அந்த எண்ணத்துக்கே சக்தி உண்டுதான். ஆனாலும் அது போதாது. அவர்கள் எந்த நல்ல பழக்கங்கள் ஜனங்களுக்கு இருக்க வேண்டும் என்று நினைத்தார்களோ, அந்தப் பழக்கங்களைத் தாங்களே முழுக்க அநுஷ்டித்துக் காட்டினார்கள். இந்த அநுஷ்டான சக்தி — சொன்னதைத் தானே செய்கிற சக்தி — தான் ஜனங்களை மாற்றியதே தவிர, வெறுமே வார்த்தையைச் சொல்லி, உபந்நியாசம் பண்ணுவது அல்ல.

உபந்நியாசமே பண்ண வேண்டாம்! தான் பெரிசாக நினைக்கிற தர்மங்களை ஒருத்தன் தானே காரியத்தில் பண்ணிக் காட்டிக் கொண்டு, ஒரு தர்மோபதேசமும் பண்ணு விட்டால் கூடப் போதும். அவன் வாழ்ந்து காட்டுகிற அநுஷ்டான சக்தி, அதுவாகவே கொஞ்சம் பேரையாவது அந்த வழிக்கு மாற்றிக்கொண்டு வந்துவிடும். எங்கேயோ ஒரு காட்டில் ஒரு மகான் உட்கார்ந்திருந்தால் கூட, அவருக்கு ஒரு தத்துவத்தில் ஸ்வயமாக அநுபவம் வந்துவிட்டிருந்தால், அது தானாக வெளி உலகத்திலும் வேலை செய்து பலபேரை அந்தக் கொள்கையில், அநுபவத்தில் கொண்டு வந்து சேர்த்துவிடும்.

இப்போது சமீப காலத்திலேயே ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இருந்தார். நம் நாளிலேயே ரமணர் இருந்தார். அரவிந்த கோஷ் இருந்தார். இவர்கள் எல்லாம் என் மாதிரி ஊர் ஊராக யாத்திரை பண்ணி உபந்நியாசம் செய்யவில்லை. அவர்கள் ஒரே இடத்தில் இருந்தார்கள். ஆனாலும் அவர்கள் இருந்த இடத்தில் ஜனங்கள் தாமாகப் போய்ச் சேர்ந்தார்கள்.

இவர்களில் அரவிந்த கோஷ் விஷயத்தில் இன்னொரு வேடிக்கை கூட. அவர் காரியம் செய்வதுதான் முக்கியம், கர்ம யோகம் தான் பிரதானம் என்று சொன்னவர். Karma Yogin என்றே பத்திரிகை கூடப் போட்டுக் கொண்டிருந்தார். 'ஸந்நியாசிகள் என்பதாக ஜனங்களையெல்லாம் விட்டு விட்டு உலகத்தைத் துறந்துவிட்டு அவர்கள் பாட்டுக்குத் தனியாகப் போய் உட்கார்ந்துகொள்வதே தப்பு. அவர்களும் உலகத்துக்காக உழைக்க வேண்டும். இப்போதிருக்கிற சந்நியாச முறை சரியில்லை, கர்ம யோகம்தான் சரி' என்ற கொள்கையையேதான் அவர் பிரசாரம் செய்து கொண்டிருந்தார். ஆனால் பிற்காலத்தில் இவரே இருந்த இடத்தை விட்டு எழுந்திருப்பதில்லை என்று உட்கார்ந்து விட்டார். அப்படியும் வெளி தேசங்களிலிருந்துகூட அவரிடம் ஜனங்கள் வந்து சேர்ந்து கொண்டுதான் இருந்தார்கள்.

ஸந்நியாச ஆசிரமத்தை முக்கியமாகச் சொன்ன மற்ற ஆசார்யர்கள் என்ன செய்தார்கள், அரவிந்த கோஷ் என்ன செய்தார் என்று சேர்த்துப் பார்க்கிறபோது வேடிக்கையாக இருக்கும். (தொடரும்)

1959ல் சென்னை பிரிவுபசாரத்தில் அருளிய உரை

## •நகர்வலம்•



ஒரு டம்ளர் தண்ணீரின் மீது ஆமதாபாத் நகர்வலம் ஆரம்பமாகியது.

என்ன? ஒன்றும் புரியவில்லையா?

ஆமதாபாத்திலும் சரி, குஜராத்திலும் சரி, எந்த வீட்டுக்குப் போனாலும் அவர்கள் ''வாருங்கள்! வாருங்கள்!'' என்று உபசரிப்பார்கள். கூடவே ஒரு டிரேயில் மூன்று நான்கு கண்ணாடி டம்ளர்களில் தண்ணீர் கொண்டுவந்து விருந்தினர்களுக்கு உபசரிப்

# பணத்தின் விஞானலம்!

பார்கள். கொஞ்ச நேரம் கழித்துத்தான் ''டீ சாப்பிடுகிறீர்களா?'' என்று கேட்பார்கள்.

நண்பர் பாபட் மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்தவர். அவர் இரண்டு மாநிலச் சம்பிரதாயங்களையும் ஒருங்கே கடைப்பிடித்தார். ஒரு டிரேயில் தண்ணீர் கிளாஸ்களையும் காப்பிக் கோப்பைகளையும் ஒருங்கே வைத்து எங்கள் முன் நீட்டினார்!

குஜராத் மாநிலம் முழுவதிலும் தேடிப் பார்த்தால் கூட மலை என்பது கிடைப்பது அரிது. ஏதோ அங்கொன்று இங்கொன்றென ஒருசில குன்றுகள் இருக்கலாம். மற்றபடி எத்தனை மைல்கள் போனாலும் நீர்வளமற்ற சமவெளிப் பிரதேசம்தான். அதனால் யாரும் சிறிது தூரம் வெளியில் நடந்தாலும் நா வறண்டுவிட ஏதுவுண்டு. அந்நிலையில் ஒருவர் வீட்டுக்குள் நுழைந்து அமர்ந்தவுடன் ஒரு டம்ளர் தண்ணீர் கொடுத்தால் வானுலகத்துத் தேவாமிர்தத்தையே வழங்குவதுபோன்ற மகிழ்ச்சி ஏற்படும். அதனால்தான் இந்தத் தண்ணீர் வழங்கும் மரபு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தமிழ் நாட்டைச் சேர்ந்த நண்பர் விளக்கம் அளித்தார்.

இப்படி ஒரு வாய் தண்ணீரும் ஒரு கோப்பைக் காப்பியும் குடித்துவிட்டு அகமதாபாத்திலிருந்து இருபது கிலோமீட்டர் தொலைவிலுள்ள குஜராத் மாநிலத்தின் புதிய தலைநகரான காந்தி நகர் சென்றோம்.

குஜராத்துக்கு இயல்பான தலைநகரம் ஆமதாபாத் இருக்க இந்தப் புதிய தலைநகரம் தோற்றுவிப்பதற்கு அவசியம் என்ன என்ற கேள்வி நம் மனத்தில் இயல்பாக எழுகிறதல்லவா? அதற்குப் பதில் ''அரசியல்வாதிகளின் காரியங்களுக்கு யார் யார் காரணம் கண்டுபிடிக்க முடியும்? வெளிப்படையாக ஒன்று சொல்லுவார்கள்; அந்தரங்கத்தில் ஒன்றிருக்கும்!'' என்றார்கள்.

காந்தி நகரில் தற்சமயம் குஜராத் மாநிலச் சட்டசபை, மந்திரி சபை அலுவலகங்கள், சர்க்கார் அலுவலகங்கள், மந்திரிகளின் குடியிருப்புக்கள், சில உத்தியோகஸ்தர்களின் குடியிருப்புக்கள் ஆகியனதாம் இருக்கின்றன. காந்திநகரிலே உருவாகும் முக்கிய செய்திகளை வெளியுலகம், அறிய, அகமதாபாத்திலுள்ள பத்திரிகையாளர்களைத் தினம் ஒரு தனி வண்டி வைத்து அழைத்துச் செல்ல வேண்டியிருக்கிறது!

சென்னை நகரத்திலிருந்து நேரே அகமதாபாத்துக்குச் சென்றால், அன்பும் பண்பும் நிறைந்த சகோதரன் வீட்டுக்கு வந்தாற்போன்ற உணர்ச்சிதான் உள்ளத்தில் எழும். ஆனால் அந்த நகரத்திலேயே வாழும் மக்களைக்







கேட்டால், ''ஆமதாபாத் பணம் புழங்கும் நகரம். பண்பாடு என்றால் பரோடாவைப் பார்க்க வேண்டும்'' என்பார்கள்.

அவர்கள் சொல்வதிலும் உண்மை இருக்கிறது. பாரத நாட்டுப் பெரிய நூற்பு ஆலைகள் இருக்கும் இடம் ஆமதாபாத். எழுபதுக்கு மேற்பட்ட ஆலைகள் உள்ளன. பாரத நாட்டுத் தொழிலாளர்களில் அதிக ஊதியம் பெறும் தொழிலாளி ஆமதாபாத் தொழிலாளிதான். மில் முதலாளிகளுக்கும் தொழி



# பண்பின் உறைவிடம்!!

## எஸ்.வி.எஸ்.



லாளர்களுக்கும் மிக சௌஜன்யமான உறவு நிலவுகிறது. இங்கு தொழில் தகராறு காரணமாக வேலைநிறுத்தம் என்ற பேச்சே எழுந்தது இடையாது. கம்யூனிஸ்டுகளோ, மற்ற தொழிற் சங்கங்களோ ஆமதாபாத்தில் நுழைய முடிந்ததில்லை. ஆமதாபாத்தின் தொழிலாளர் நலனைச் சென்ற பல ஆண்டுகளாக ''மஜ்தூர் மகாஜன் சங்கம்'' என்ற ஸ்தாபனம்தான் கட்டிக் காத்து வந்துள்ளது. இச்சங்கத்தின் தலைவர்களாகத் தொடர்ந்து நல்ல தேசபக்தர்களே இருந்து வந்திருக்கிறார்கள். இப்போது கூட இச் சங்கத்தின் தலைவர் குஜராத் மாநில மந்திரியாகப் பணியாற்றுகிறார் என்று மிகுந்த பெருமிதத்துடன் கூறினார்கள்.

பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சுல்தான் அக்மத் ஷா ஸபர்மதி நதிக் கரையில் முகாமிட்டிருந்தான். அப்போது அவன் உள்ளத்தை ஆட்கொண்ட பிரச்னை— தலைநகர் நிர்மாணிக்கத் தகுந்த இடம் தேர்ந்தெடுப்பதுதான். அப்போது அவன் ஒரு

1. குஜராத் முதல்வர் திரு பாபுபாய் பட்டேல்.
2. ஹத்திஸிங் கோயிலின் நுழை வாயில்.
3. ஜும்மா மஸ்ஜித்.
4. ராஜபவன்.
5. சிற்பத்தில் பூ வேலை - ஸித்தி ஸயீத் மசூதி.
6. குலுக்கும் ஸ்தூபிகள்.





முயல், கல்தானின் வேட்டைநாய்களைத் துரத்துவதைப் பார்த்தான். அவனுக்கு ஒரே வியப்பாகப் போய் விட்டது. இந்த மண்ணின் விசேஷம்தான் முயலுக்கு இவ்வளவு துணிவு ஊட்டியிருக்கிறது. வீரம் விளைவிக்கும் இந்த மண்ணை விடச் சிறந்த பிரதேசம் தலைநகர் அமைக்க இருக்க முடியாது என்று தீர்மானித்தான். தன் பெயரிலேயே தலைநகர் நிர்மாணித்துக் கோட்டை கட்டிவிட்டான்.

இந்தக் கதையை நண்பர் சொல்லி வந்த போது மனம் தமிழ் நாட்டை நோக்கிச் சென்றது. கட்டபொம்மன் ஆண்ட பாஞ்சாலங்குறிச்சியையும் அவன் மீது வழங்கும் நாடோடிப் பாடலையும் நினைவுகூர்ந்தது.

"அன்பு வளர்ந்தேறும் பாஞ்சால நாட்டினில்
அதிசயம் சொல்லக் கேள்தோழீ !
தென்பாஞ் சைப்பதி நாட்டு முயலது
திரும்பி நாயைத் துரத்திடுமோம் !"

ஆமதாபாத் எங்கே! பாஞ்சாலங்குறிச்சி எங்கே! ஆயினும் ஒன்றுடன் ஒன்று எப்படிக் கருத்தொற்றுமையில் இணைகின்றன!

இப்படி நான் சிந்தனை லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் எனக்கு ஊரைச் சுற்றிக் காட்ட வந்திருந்த நண்பர் "அகமதாபாத் மசூதிகள் நிறைந்த நகரம்! ஐம்பதுக்கு மேல் இருக்கின்றன மசூதிகள்!" என்றார்.

இம்மசூதிகளுக்கெல்லாம் போகையில் அவற்றின் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளைப் பார்க்கும்போது, 'ஐயோ, இவை ஹிந்துக் கோயில் தூண்களைப் போல் காணப்படுகின்றனவே! ஏதோ ஒரு முஸ்லிம் அரசன் நல்ல ஹிந்துக் கோயிலைத் தரைமட்டமாக்கிவிட்டு, தூண்களை மட்டும் இங்கு கொண்டு வந்து வைத்துவிட்டானோ?' என்ற சந்தேகம் எழும்.

இச்சந்தேகத்தைச் சரித்திரப் பேராசிரியரும், புதைபொருள் இலாகாப் பேராசிரியருமான ஒருவரிடம் வினவினேன். அவர் "அத்தூண்கள் கோயில்களிலிருந்து கொண்டு வரப்பட்டன என்று சொல்வது தவறு. நமது கோயில் தூண்களில் மனித சிற்ப உருவங்கள் இருக்கும். கணிகையரின் நடனக் காட்சிகளோ மன்னர்கள் அஞ்சலி செய்கின்ற தோற்றமோ, அல்லது இறைவனின் திருவிளையாடல்களோ ஏதாகிலும் இருக்கும். ஆனால் இம்மசூதி சிற்பத் தூண்களில் அவ்வித உருவங்களைக் காண முடியாது. ஆக, முஸ்லிம் அரசர்கள் ஹிந்து சிற்பக் கலைஞர்களைக் கூப்பிட்டு மசூதி எழுப்பச் சொல்லியிருக்கிறார்கள். அச்சிற்பிகள் தங்களுக்குப் பழக்கப்பட்ட சிற்ப நடையில் கட்டடம் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள்" என்று கூறினார்.

அகமதாபாத்திலிருந்த ஒரு முஸ்லிம் மன்னன், தான் வெற்றி கண்ட முஸ்லிம் மன்னனின் ஹிந்து மனைவியைத் தனது மனைவியாக ஏற்றுக் கொண்டான். அவள் பெயர் ரூபவதி. அவளுடைய பெயருக்கு ஏற்றாற்போல் அழகும் அருங்குணமும் நிரம்பியவளாக இருந்திருக்க வேண்டும். அவளிடம் ஆழக் காதல் கொண்டான். அவள் மன்னனுக்கு முன் இறந்துபடவே அவன் தன் காதலின் நினைவாக ஓர் அழகிய கலைப் பொக்கிஷமாகத் திகழும் 'ரூப்மதி மசூதி'யை எழுப்பினான்.

உலக அதிசயங்களில் ஒன்றாகத் திகழும் நடுங்கும் ஸ்தூபிகள் கொண்ட நகரம் ஆமதாபாத். மசூதிகளில் வானளாவ ஓங்கி நிற்கும் கல் தூண்களைப் பார்த்திருப்பீர்கள். இங்கு ஸிதி பஷீர் மசூதியிலுள்ள ஒரு ஸ்தூபியை அசைத்தால் பக்கத்திலுள்ள ஸ்தூபி குலுங்குவதைப் பார்க்கலாம், உணரலாம்.

செங்கல்லாலும், காரையாலும் கட்டப்பட்ட ஸ்தூபி ஒன்றை அசைத்தால் உதிர்ந்து விழாமல் ஆடுவதே ஓர் அதிசயம். அதை விட அதிசயம் பத்துப் பதினைந்து அடிகளுக்கு அப்பால் நிற்கும் அதே மாதிரியான மற்றொரு ஸ்தூபி அதே அளவுக்கு அசைவது! அந்நாளைய பொறி இயல் கலையின் ஓர் அற்புதம் இது.

இதே மாதிரியான அசையும் ஸ்தூபிகள் கொண்ட மசூதி ஆமதாபாத்தில் மற்றோர் இடத்திலும் இருந்திருக்கிறது. இவை எப்படி அசைகின்றன என்ற ரகசியத்தைக் கண்டு பிடிக்க ஸ்தூபியை இடித்துப் பார்த்திருக்கிறார்கள். இடித்துப் பாழாக்கியதுதான் கண்ட பலனே தவிர நுட்பம் புரியவில்லை!

குஜராத் மாநிலம் பூர்வ காலத்திலும் சரி, இப்போதும் சரி, சமண மதத்துக்கு மிக முக்கியத்துவம் அளிக்கும் பகுதியாகும். இன்றும் கணிசமான ஜெயினர்கள் செல்வாக்கு மிக்க மில் அதிபர்களாகவும் தொழிலதிபர்களாகவும், வர்த்தகப் பிரமுகர்களாகவும் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களில் முக்கியமானவர்கள் ஹத்திசிங் குடும்பத்தினர். இக் குடும்பத்தின் மூதாதையர் ஒருவர் கேஸரி சிம்ஹ ஹத்திஸிங் என்பவர் 1848ம் ஆண்டு பதினைந்தாவது தீர்த்தங்கரராகிய தர்மநாதருக்கு அழகிய வேலைப்பாடுகள் செய்த பளிங்குக் கல் ஆலயம் நிறுவியிருக்கிறார். மூலவரைச் சுற்றி 52 சிறு சிறு கோயில்கள் எழுப்பியிருக்கிறார்கள். விசாலமான துப்புரவான கோயில். உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும் சூழ்நிலை.

இப்படிச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மசூதிகளும் கோயில்களும் காணப்பட்டாலும் அகமதாபாத் நகரத்துக்கே அழகூட்டுவது கன்காரியா ஏரிதான். எழுபத்தாறு ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ள அந்த ஏரியை 1451ம் ஆண்டு கல்தான் குதுப் உத்தீன் நிர்மாணித்தானாம். அதை இன்றைய ஆமதாபாத் நகராட்சி மன்றம் குழந்தைகள் விளையாடுவதற்கான பார்க், நூல் நிலையம், பொம்மை வீடு முதலியன அமைத்து நல்லபடியாக நிர்வகித்து வருகிறது. ஏரிக் கரையைச் சுற்றிச் சாய்மான பெஞ்சுகள் போடப்பட்டுள்ளன. சாயந்தரமானால் ஓய்வு பெற்ற உத்தியோகஸ்தர்களும் முதியவர்களும் அங்கு கூடுகிறார்கள். காதல் பறவைகளும் அங்கு வந்து சரச சல்லாபம் புரிகின்றன. சென்னை நகருக்குக் கடற்கரை, அகமதாபாத்வாசிகளுக்கோ கன்காரியா ஏரி.

ஹிந்துக்களுக்குக் காசியும் ராமேசுவரமும் எப்படியோ, முஸ்லிம்களுக்கு மெக்காவும் மெடினாவும் எப்படியோ, அப்படித் தேசபக்தத் திருக்கூட்டத்துக்குப் புனிதஸ்தலம் அகம



நீண்ட காலத்துக்குப்பின் வீட்டுக்கு வந்த கல்லூரி மாணவனிடம் வயதான பாட்டி சொன்னாள்: "அம்பி ! உன்னைப் பார்த்து அடையாளம் புரியலே. ரொம்ப நாளாச்சுது ! முன்னே நீ கோழிக் கால் பாண்ட் போட்டிருப்பே! இப்போ யானைக்கால் பாண்ட் போட்டுண்டு வந்திருக்கே."

-கொ. வேங்கடசாமி

# இயற்கை உங்களுக்கு அளித்துள்ளது எழில்மிகு கேசம்...
## அதனை அவ்வண்ணமே வைத்திருப்பீர்
## ஹேலோ கேச பராமரிப்புமூலம்

ஹேலோ ஷாம்பூக்கள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன—உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:**
இந்த விசேஷ ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ எக் ஷாம்பூ:**
விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனாக உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன், கவர்ச்சியாகத் திகழ்கிறது.




**ஹேலோ லெமன்—ஃப்ரெஷ் ஷாம்பூ:**
உங்கள் கேசத்திற்கு இயற்கையான தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:**
சாதாரணமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு—இன்றே உபயோகிக்கத் தொடங்குவீர் ஹேலோ**

HSR.G.I.TM

# வாழ்க்கைத் துணைவிகளுக்கு ஓர் வாழ்நாள்-துணை!





## Prestige

பிரார்த்தனைகள், நறுமணங்கள், இசை, சிரிப்பு, சற்றே கண்ணீரும் கூட, உங்கள் பெண்ணுக்குத் திருமணம். உணர்ச்சிகளை அடக்கப் பாடுபடுகிறீர்கள். மனத்திலே ஆயிரம் எண்ணங்கள் ஓடுகின்றன. நீங்கள் வழங்கிய சிறப்பான சீர் வரிசை: பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர், உங்கள் மகளின் சமையல் பிரச்னைகளைக் கவனித்துக் கொள்ளும் சிறப்புப் பரிசு அது. வாழ்க்கைத் துணைவிகளுக்கு என்றும் வாழ்நாள்-துணையாக விளங்கும் பரிசு.

சிக்கனமாக வாழ்க்கை நடத்தும் இளம் தம்பதிகளுக்கு காலமும் எரிபொருளும் மிச்சப்படுத்தும், பரிசும், பாதுகாப்பும் வசதியும், சுத்தமும் ஒருங்கே இணைந்த பரிசுப் பொருள்.

பிரஸ்டீஜ் பயன் படுத்தும் 15 லட்சத்துக்கு அதிகமான குடும்பத் தலைவிகளுக்கு இந்த பிரஷர் குக்கர் ஒரு வாழ்நாள்-துணையாக இருப்பதில் என்ன வியப்பு?

எனவே, இன்றைய இனிய நாளை என்றும் நினைவில் இருக்கச்செய்ய, அவர்கள் என்றும் மறக்கமுடியாத பரிசினை அளியுங்கள்.

இரட்டிப்பு வசதியுள்ள மூடி, மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிடியுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான் ISI தர முத்திரை, நாடெங்கிலும் ஸர்வீஸ் நிலையங்கள் — பிரஸ்டீஜின் சிறப்பு அம்சங்கள்.

கவனிக்கவும்: பிரஸ்டீஜின் அடிப்புறம் அதி கனமானது— நீண்ட ஆயுள். சீரான உஷ்ணத்தை அளிக்கிறது.

## Prestige

பிரஸ்டீஜ் விற்பனையிலும் மக்கள் விருப்பத்திலும் இன்று இந்தியாவில் உயர்ந்து நிற்கும் பிரஷர்குக்கர்.

Prestige PREETT

டிடி. (பிரைவேட்) லிமிடெட் பெங்களூர் 560 016

SAA/TTP/1784

தாபாத்தில் உள்ள **சபர்மதி ஆசிரமம்**. இந்த ஆசிரமத்திலிருந்துதான் காந்தி மகான், பாரத நாட்டு மக்களுக்குத் தேசபக்தியையும் தியாக வாழ்க்கையையும் ஊட்டி வந்தார். இங்கிருந்துதான் உப்பு சத்தியாக்கிரகத்துக்காக டாண்டியை நோக்கிக் காந்தி மகான் தொண்டர்களுடன் கால்நடையாகப் பிரயாணம் செய்தார். இப்படிப்பட்ட புனித ஸ்தலத்துக்கு ராஜாஜி 4–6–59ல் மறு விஜயம் செய்தபோது அடியேனும் உடன் சென்றிருந்தேன். அன்று ராஜாஜி, தாமும் காந்தி மகானும் ஒருநாள் இரவு வந்ததையும் அப்போது காந்தி மகான் தம் கையாலேயே சபர்மதி ஆற்றை நோக்கியிருந்த கடப்பைக் கல் வராந்தாவைப் பெருக்கிச் சுத்தம் செய்து தமக்குப் படுக்க வசதி செய்து கொடுத்ததையும் இன்னோரன்ன மற்றச் சிறு சிறு நிகழ்ச்சிகளையும் நினைவுகூர்ந்தார். நான் இன்று சபர்மதி ஆசிரமத்துக்கு வந்தபோது அவையெல்லாம் என் மனத் திரையில் எழுந்து உடல் சிலிர்க்கச் செய்தன.

அகமதாபாத் நகரத்தில் புருஷனைப் பார வண்டியில் உட்கார வைத்து மனைவி இழுத்துக்கொண்டு போகும் காட்சியைச் சர்வ சாதாரணமாகக் காணலாம்.

பார வண்டியில் சாமான்களை ஏற்றிக் கணவன் ஒருபுறமும் மனைவி ஒரு புறமுமாக இழுத்துச் செல்லும் காட்சியையும் பார்க்கலாம்.

ஆட்டோ ரிக்ஷாக்களில் மூன்று பேர் உட்கார்ந்து போக அங்கு அனுமதி உள்ளது.

அகமதாபாத்தில் மானெக் சௌக் என்னும் இடம் ஒரு முக்கியமான வியாபார ஸ்தலம். காய்கறி, துணி, பால், நகைக் கடைகள் இப்படிப் பல வியாபாரங்கள் நடக்கும். இந்த இடத்தைப் பற்றி ஒரு ரசமான கதை கூறுகிறார்கள்.

கல்தான் அகமத் ஷா, கோட்டையைக் கட்டிக் கொண்டு வந்தபோது, பகலெல்லாம் கட்டிய மதில் சுவர் இரவானால் இடிந்து விழுந்து விடுவதைக் கண்டு அதிசயித்தான்.

இதற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்தபோது அப்பகுதியில் மானெக் பாபா என்று கம்பளம் நெய்யும் நெசவாளி வசித்து வருவதாகவும் அவர் காலையிலிருந்து மாலைவரை நெய்வதை இரவானால் இழை இழையாகப் பிரிப்பதாகவும் தெரிய வந்தது.

''இதன் விளைவாகத்தான் பகலில் கட்டிய மதிற்சுவர் காலையில் இடிந்து காணப்படுகிறது'' என்று மக்கள் கூறினார்கள்.

கல்தான் அகமத் ஷா ரொம்ப யோசித்து ஒரு யுக்தி செய்தார். ''பாபா! தங்களுக்கு அசாத்திய தெய்விக சக்தி இருக்கிறது என்று ஊர் ஜனங்கள் கூறிக் கொள்கிறார்கள். அப்படியானால் நீங்கள் இந்த ஜாடிக்குள் நுழைந்து உங்கள் சக்தியை நிரூபியுங்கள்!'' என்றார்.

மனெக் பாபா தமது சக்தியை நிரூபிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் ஜாடிக்குள் நுழைந்தார். உடனே கல்தான், பாபா வெளியில் வராதபடி ஜாடியின் மூடியை அழுத்தமாகத் திருகிவிட்டார்!

அகமதாபாத் கோட்டை மதிற்சுவரும் உறுதியாக நிற்கத் தொடங்கியது.

குஜராத் மாநிலத்தின் கவர்னர் வசிக்கும் ராஜபவன் சரித்திர முக்கியத்துவமும் இலக்கிய முக்கியத்துவமும் வாய்ந்த இடம்.

தாஜ்மகால் எழுப்பிய ஷாஜஹான்தான் இந்த அழகிய கட்டடத்தையும் 1618ம் ஆண்டில் ஸபர்மதிக் கரையில் இயற்கை வனப்பை ரசிக்கும் வகையில் எழுப்பினான். இங்குதான் ரவீந்திரநாதரின் மூத்த தமையனாரான ஸத்யேந்திரநாத் டாகுர் அகமதாபாத்தின் ஜில்லா ஜட்ஜாக நியமிக்கப்பட்டபோது 1878ல் வசித்து வந்தார். ஸத்யேந்திரநாத் டாகுர்தான் முதல் ஐ. ஸி. எஸ். காரர் என்று சொல்லுகிறார்கள். தமையனார் இங்கு வசித்து வந்தபோது, ரவீந்திரநாத் டாகுர் இங்கு சில காலம் தங்கியிருக்கிறார். இங்கு அவர் தங்கிய காலத்தில்தான் 'பசித்த கற்கள்' (Hungry Stones) என்ற கதைக்கு வேண்டிய கருப் பொருளும் சூழ்நிலையும் கிடைத்தன என்றும் இங்குதான் எழுதினார் என்றும் சொன்னார்கள். இப்பொழுதும் அந்த அறையை ''டாகுர் அறை'' என்று பெயரிட்டு அழைக்கிறார்கள். இப்போது இம்மாளிகையை அலங்கரிக்கும் கவர்னர் திரு விசுவநாதன் அவர்களைச் சந்தித்தபோது, அவரை ஒரு கேள்வி கேட்டேன்: ''அகமதாபாத் மக்களிடம் உங்களைப் பெரிதும் கவர்ந்த அம்சம் என்ன?''

''இந்த ஊர்ப் பெண்களின் சிறந்த சமூக நலப் பணிகள் என்னைக் கவர்ந்துள்ளன. அவர்கள் அநாதை ஆசிரமங்கள், பள்ளிக்கூடங்கள் இப்படிப் பலவகைப்பட்ட பணிகளை மிகச் சிறப்பாகச் செய்கிறார்கள். காந்தி மகான் மூட்டிவிட்ட கனல் இன்றும் அவர்கள் உள்ளத்தில் கனன்று கொண்டிருக்கிறது போலும். மிகத் திறமைசாலிகள். சில பெண்கள் இங்கு ஆலைகளைக்கூட நிர்வகிக்கிறார்கள்!'' என்று வியந்து கூறினார்.

கவர்னரைப் பார்த்ததாகக் கூறியவுடன் 'முதன் மந்திரியைப் பார்த்தீர்களா?' என்று யாரோ கேட்பது காதில் விழாமல் இல்லை. சந்தித்தேன்.

முதன் மந்திரி திரு பாபுபாய் பட்டேல் உண்மையான காந்தியவாதி. நிர்வாக அனுபவமும், எளிமையும் நேர்மையும் ஒருங்கே பெற்றவர். மொரார்ஜி தேசாயின் பிரதம சீடர்.

பேச்சினிடையே அவருக்குத் தமிழ் மக்களிடமும், தமிழக முதல்வரிடமும் நல்ல மதிப்பிருக்கிறது என்பதை உணர்ந்தேன். ''பாரத நாட்டிலேயே எங்கள் மாநிலத்திலும் உங்கள் மாநிலத்திலும்தானே மதுவிலக்கு அமுலிலிருக்கிறது. அதனால் இவ்விஷயம் பற்றிப் பேசக் கருணாநிதி அவர்களை அழைத்திருக்கிறேன். அவர் கூட வரலாம்!'' என்றார்.

ஆமதாபாத்தில் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் ஏராளமான பேர் வசிக்கிறார்கள்.

குஜராத்தியர்களும், தமிழர்களும் மிக மன ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகிறார்கள். குஜராத்தியர்கள் தமிழர்களின் அறிவாற்றலையும் செயல் திறமையையும் வெகுவாகப் பாராட்டுகிறார்கள். தமிழர்கள் குஜராத்தியரின் தொழில் வியாபார ஆற்றலையும் பணத்தினால் பாதிக்கப்படாத பண்பாட்டையும் போற்றி மகிழ்கிறார்கள்.

---



குறைவாகச் சாப்பிடுபவனைக் 'குருவி மாதிரி சாப்பிடுகிறான்' என்று கூறுவது தவறு. ஏனெனில் குருவி ஒரு நாளைக்குத் தன் எடையைப் போல நான்கு மடங்கு எடை உணவு சாப்பிடும்! - பேஜண்ட் - பாலி

# அன்னை ஆரோக்கியமரி பசிலிக்கா

## சிவாஜிநகர், பெங்களூர்



இப்பசிலிக்கா
இந்தியாவிலே ஆறுவதும்,
கர்னடக மாநிலத்திலே
முதலாவதாகும்

எண்ணிக்கையில்லா பக்தர்களும், திருயாத்திரிகர்களும், சுற்றுலாப் பயணிகளும், இப்பசிலிக்காவிலுள்ள அன்னையின் அற்புத திருத்தலத்தைத் தரிசித்து, அமல அன்னையை வாழ்த்தி வணங்கி ஆன்ம அமைதியோடும், ஆனந்த மகிழ்ச்சியோடும் இல்லம் செல்லும் காட்சியே காட்சி!

ஒவ்வொரு ஆண்டும், செப்டம்பர் 8-ம் நாள் பேராலயத்தின் பாதுகாவலியான அன்னை ஆரோக்கிய மரியின் விழாவும், ஜனவரி 26-ம் நாள் இக்கோயில் நம் திருத்தந்தை 6-ம் சின்னப்பரால் பசிலிக்காவாக உயர்த்தப்பட்ட நினைவு நாளும் பக்தி விமரிசையுடனும், கோலாகலச் சிறப்புடனும் கொண்டாடப் படுகின்றன.

எனவே, அன்னை ஆரோக்கியமரி பசிலிக்காவுக்குத் திருயாத்திரையாக வாருங்கள், பரிபூரண பலன்களைப் பெற்றேகுங்கள். நமது ஆரோக்கிய அன்னை உங்களுக்கு அருளையும் ஆன்ம நிறைவையும், உடல்நலத்தையும் வாழ்வில் வளத்தையும் அபரிமிதமாக நல்குவாள்.

மறைதிரு பால்கிணற்றுக்கர
பங்கு தந்தை

### முப்பதாம் அத்தியாயம்

## வாதாபிப் பெரும் போர்

வெகு காலமாக இல்லாத வழக்கமாக அஜந்தாவில் கலைவிழா நடந்தது. அது அரை குறையாக முடிவுற்று ஒரு மாதத்துக்கு மேல் ஆயிற்று.

அந்த ஒரு மாதமும் வடக்கேயிருந்து வாதாபியை நோக்கி விரைந்து வந்த சளுக்க சைனியத்துக்கும் தெற்கேயிருந்து படையெடுத்து வந்த பல்லவ சைனியத்துக்கும் ஒரு பெரிய போட்டிப் பந்தயம் நடந்து கொண்டிருந்தது.

வாதாபியை முதலில் யார் அடைவது என்கிற அந்த விரைவுப் பந்தயத்தில் பல்லவ சைனியமே வெற்றி அடைந்தது.

வழியில் யாதோர் எதிர்ப்புமின்றித் தங்கு தடையில்லாமல் பொங்கி வரும் சமுத்திரத்தைப் போல் முன்னேறி வந்த அந்தப் பல்லவ சேனா சமுத்திரமானது, சளுக்க சைனியம் வடக்கே இன்னும் ஆறு காத தூரத்தில் இருக்கும்போதே வாதாபியை அடைந்து அந்த மாபெரும் நகரத்தின் கோட்டை மதிலை நாற்புறமும் சூழ்ந்து கொண்டது.

திடீரென்று முன்னெச்சரிக்கையில்லாமல் நேர்ந்த அந்தப் பெருவிபத்தினால் வாதாபி மக்கள் கதி கலங்கிப் போனார்கள்.



புலிகேசிச் சக்கரவர்த்தியின் வீர சௌரிய பராக்கிரமங்களையும், அவருடைய புகழானது கடல்களுக்கப்பால் உள்ள தூர தூர தேசங்களிலெல்லாம் பரவியிருப்பதையும் எண்ணிப் பெருமிதத்துடன் இருந்த வாதாபியின் மக்கள் தங்கள் நாட்டின்மீது இன்னொரு நாட்டு அரசன் படையெடுத்து வரக்கூடும் என்று கனவிலும் கருதவில்லை.

சற்றும் எதிர்பாராத சமயத்தில் களங்கமற்ற வானத்திலிருந்து விழுந்த பேரிடி போல் வந்த பல்லவப் படையெடுப்பு அவர்களுக்குப் பிரமிப்பையும் திகைப்பையும் உண்டாக்கியது.

நகரில் அச்சமயம் சக்கரவர்த்தி இல்லை என்பதும் கோட்டைப் பாதுகாப்புக்குப் போதுமான சைனியமும் இல்லையென்பதும் ஜனங்கள் எல்லோருக்கும் தெரிந்திருந்தன; இதனால் நகர மாந்தரில் பெரும்பாலோர் என்றும் அறியாத பீதிக்கு உள்ளாயினர்.

பௌத்தர்களிடம் விரோத பாவம் கொண்டிருந்த சமணர்கள், சைவர்கள், சாக்தர்கள் ஆகியோர், ''அஜந்தா கலைவிழா உண்மையிலேயே பௌத்தர்களின் சதியாலோசனைச் சூழ்ச்சி'' என்று பேசிக் கொண்டார்கள்.

பொதுமக்களின் கோபத் தாக்குதலுக்கு உள்ளாகாமல் பௌத்த விஹாரங்கள், பௌத்த மடங்கள் ஆகியவற்றைக் காப்பாற்றும் பொருட்டு வாதாபிக் கோட்டைத் தலைவன் பீமசேனன் மேற்படி விஹாரங்களுக்கும் மடங்களுக்கும் விசேஷக் காவல் போட வேண்டியதாயிற்று.

அதோடு, ஜனங்களின் பீதியைப் போக்கித் தைரியம் ஊட்டுவதற்காகச் சக்கரவர்த்தியிடமிருந்து அவசரத் தூதர்கள் மூலமாக வந்த திருமுக ஓலையை வாதாபி நகரில் நாற்சந்திகளில் எல்லாம் தளபதி பீமன் வாசிக்கப் பண்ணியிருந்தான்.

சக்கரவர்த்தி, அந்தத் திருமுகத்தில் நர்மதைக் கரையில் உள்ள மாபெரும் சளுக்கர் சைனியத்துடன் தாம் வாதாபியை நோக்கி விரைந்து வந்து கொண்டிருப்பதாகவும், வேங்கி நாட்டிலிருந்து இன்னொரு பெரும் சைனியம் வந்து கொண்டிருப்பதாகவும், ஒருவேளை தாம் வருவதற்குள்ளே பல்லவ சைனியம் வாதாபியை அடைந்து முற்றுகையிட்டு விட்டால் அதற்காக நகர மக்கள் மனம் கலங்க வேண்டாம் என்றும், பல்லவ சைனியத்தை நிர்மூலம் செய்து வாதாபியைக் கூடிய சீக்கிரம் முற்றுகையிலிருந்து விடுதலை செய்வதாகவும் உறுதி கூறியிருந்தார்.



மேற்படி திருமுகத்தை நாற்சந்திகளில் படிக்கக் கேட்ட பிறகு வாதாபி மக்கள் ஒருவாறு பீதி குறைந்து தைரியம் பெற்றார்கள்.



நர்மதை நதிக் கரையிலிருந்த சளுக்கப் பெரும் படையுடன் புலிகேசிச் சக்கரவர்த்தி வாதாபிக்கு நாலு காத தூரத்தில் வந்து சேர்ந்தபோது தமக்கு முன்னால் பல்லவ சைனியம் வாதாபியை அடைந்து கோட்டையைச் சூழ்ந்து கொண்டது என்ற விவரம் அறிந்தார். உடனே பிரயாணத்தை நிறுத்திக் கொண்டார். வேங்கி சைனியம் வழியிலே பல காடு மலை



**தூக்கத்தில் கல்வி!**

இத்தாலியில் ஒரு பள்ளியில் ஆசிரியர் மெரிலோ பெல்லினி தம் மாணவர்களை மனோவசியத்தினால் மயக்கித் தூங்க வைத்துக் கல்வி போதிக்கிறார். இதனால் அவர்கள் கூடுதலான கல்வியறிவு பெற வாய்ப்பு இருக்கிறது என்கிறார்! மாணவர்களை மனோவசியப்படுத்தித் தூங்கச் செய்த பிறகு அவர் பாடங்களை மாணவர்களின் செவிகளில் பொருத்தப்பட்ட 'காது போன்' வழியாக விளக்கிக் கூறுகிறார். அவரது இந்தப் புதிய முறை விளையாட்டுக்காரர்களின் விளையாட்டுத் திறமை பெருகவும் உதவுகிறதாம்!

- சயன்ஸ் டைஜஸ்ட் - பி. எஸ். எம்.

---

நதிகளைக் கடந்து வரவேண்டியிருந்தபடியால் அது வந்து சேர இன்னும் சில காலம் ஆகும் என்றும் தெரிய வந்தது. இந்த நிலைமையில் புலிகேசிச் சக்கரவர்த்தி தம் மந்திரிகளையும் படைத் தலைவர்களையும் கலந்தாலோசித்து, உடனே போர் தொடங்காமல் சில நாட்கள் காத்திருக்க முடிவு செய்தார். வேங்கி சைனியமும் வந்து சேர்ந்த பிறகு பல்லவ சைனியத்தை ஒரு பெருந் தாக்காகத் தாக்கி நிர்மூலம் செய்துவிடுவது என்றும், அது வரையில் அப்போது வந்து சேர்ந்திருந்த இடத்திலேயே தங்குவது என்றும் தீர்மானித்திருந்தார்.

ஆனால், அவருடைய தீர்மானங்களை நிறைவேற்றுவதற்குப் போர்க் கலையில் மகா நிபுணர்களான மாமல்லச் சக்கரவர்த்தியும் சேனாதிபதி பரஞ்சோதியும் இடம் கொடுக்கவில்லை.

முதலிலே வாதாபிக் கோட்டையைத் தாக்குவதா அல்லது புலிகேசியின் தலைமையில் உள்ள சளுக்கப் பெரும் படையைத் தாக்குவதா என்ற விஷயம் பல்லவ சேனைத் தலைவர்களின் மந்திராலோசனைச் சபையில் விவாதிக்கப்பட்டது.

வந்த காரியம் வாதாபியைக் கைப்பற்றுவதேயாதலால் உடனே கோட்டையைத் தாக்க வேண்டும் என்று மானவன்மரும் அச்சுதவர்மரும் அபிப்பிராயப் பட்டார்கள்.

வேங்கி சைனியம் வருவதற்குள்ளே புலிகேசியைத் தாக்கி ஒழித்துவிட வேண்டும் என்றும், வாதாபிக் கோட்டை எங்கேயும் ஓடிப் போய் விடாதென்றும், அதன் முற்றுகை நீடிக்க நீடிக்கப் பிற்பாடு அதைத் தாக்கிப் பிடிப்பது சுலபமாகிவிடும் என்றும் சேனாதிபதி பரஞ்சோதி கூறினார்.

ஒற்றர் தலைவன் சத்ருக்னன் சேனாதிபதியை ஆதரித்தான்.

மாமல்லரும் அந்த யோசனையையே முடிவாக ஒப்புக் கொண்டார்.

எனவே, வாதாபிக் கோட்டையின் முற்றுகைக்கு ஒரு சிறு படையை மட்டும் நிறுத்திவிட்டு, பல்லவ சைனியத்தின் மற்றப் பெரும் பகுதி வடக்கு நோக்கிக் கிளம்பிற்று.

இதை அறிந்த புலிகேசிச் சக்கரவர்த்தி இனித் தாம் பின்வாங்கிச் சென்றால் சளுக்க சாம்ராஜ்யத்தின் மதிப்பு சின்னாபின்னமாகி விடும் என்பதை உணர்ந்து போருக்கு ஆயத்தமானார்.

வாதாபிக்கு வடக்கே மூன்று காத தூரத்தில் இரு பெரும் சைனியங்களும் கைகலந்தன.

அந்தக் காட்சியானது கீழ் சமுத்திரமும் மேல் சமுத்திரமும் தங்குதடையின்றிப் பொங்கி வந்து ஒன்றோடொன்று மோதிக் கலந்ததைப் போல் இருந்தது.

மூன்று பகலும் மூன்று இரவும் கோரமான யுத்தம் நடந்தது.

ஆயிரம் பதினாயிரம் வீரர்கள் வாளால் வெட்டுண்டும் வேலால் குத்துண்டும் போர்க்களத்தில் மாண்டு விழுந்தார்கள்.

வீர சொர்க்கம் அடைந்தவர்களின் சவங்கள் — கால் வேறு கை வேறு தலை வேறான உயிரற்ற உடல்கள், — போர்க்களத்தில் மலை மலையாகக் குவிந்தன.

இறந்த யானைகளின் உடல்கள் ஆங்காங்கு கருங் குன்றுகளைப் போல் காட்சி தந்தன.

மனித உடல்களின்மீது குதிரைகளின் உடல்களும் குதிரைகளின் சவங்கள் மீது மனிதர்களின் பிரேதங்களுமாகக் கலந்து கிடந்தன.

மரணாவஸ்தையிலிருந்த மனிதர்களின் பரிதாப ஓலமும் யானைகளின் பயங்கரப் பிளிறலும் குதிரைகளின் சோகக் கனைப்பும் கேட்கச் சகிக்காத கோரப் பெருஞ் சத்தமாக எழுந்தன.

போர்க்களத்திலிருந்து இரத்த ஆறுகள் நாலு பக்கமும் பெருக்கெடுத்துப் பாய்ந்து ஓடின.

அந்த உதிர நதிகளில் போர் வீரர்களின் வெட்டுண்ட கால் கைகள் மிதந்து சென்றது பார்க்கச் சகிக்காத கோரக் காட்சியா யிருந்தது.

இலட்சக்கணக்கான வீரர்களும் ஆயிரம் பதினாயிரக்கணக்கான யானைகளும் குதிரைகளும் ஈடுபட்டிருந்த அந்த மாபெரும் யுத்தத்தை நடந்தது நடந்தபடி வர்ணிப்பது நம்மால் இயலாத காரியம்.

வால்மீகியையும் வியாசரையும் ஹோமரையும் கம்பரையும் போன்ற மகா நாடக ஆசிரியர்களுக்குத்தான் அதன் வர்ணனை சாத்தியமாகும்.

போரின் ஆரம்பத்திலிருந்தே ஒருவாறு கட்சிகளின் பலம் தெரிந்துவிட்டது. போர்க் கலையின் நுட்பங்களை

# புதிய அனுபவம், பேரானந்தம்



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



செஞ்சுரி -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT/925

அறிந்தவர்கள், போரின் முடிவு என்ன ஆகும் என்பது ஊகித்துணர்வதும் சாத்தியமாயிருந்தது.

வாதாபிக்கருகில் தங்கிச் சிரம பரிகாரம் செய்து கொண்டு பூரண பலத்துடனும் அளவில்லா உற்சாகத்துடனும் போரில் ஈடுபட்ட பல்லவ சைனியத்தின் பெருந் தாக்குதலுக்கு முன்னால், நெடுந்தூர இடைவிடாப் பிரயாணத்தினால் களைப்புற்றிருந்த சளுக்க சைனியம் போர்க் களத்தில் நிற்பதற்கே திணறியது.

சளுக்க சைனியத்தின் பிரதான யானைப் படை வேங்கியில் இருந்தபடியால் அது வந்து சேராதது சளுக்க சைனியத்தின் பலக் குறைவுக்கு முக்கிய காரணமாயிருந்தது.

மூன்றும் நாள் காலையில் பல்லவ சைனியத்தின் வெற்றியும் சளுக்க சைனியத்தின் தோல்வியும் சர்வ நிச்சயமாகத் தெரிந்துவிட்டன.

அன்று மத்தியானம் சளுக்கத் தளபதிகளும் மந்திரிகளும் புலிகேசிச் சக்கரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டு, சாம்ராஜ்யத்தின் நன்மைக்காக அவர் பின் வாங்கிச் சென்று எங்கேயாவது ஒரு பத்திரமான இடத்தில் வேங்கி சைனியம் வந்து சேரும் வரையில் காத்திருக்க வேண்டும் என்று வற்புறுத்திச் சொன்னார்கள்.

அதைத் தவிர வேறு வழியில்லை என்பதைக் கண்டு சக்கரவர்த்தியும் அதற்குச் சம்மதித்தார். சேதமாகாமல் மீதமிருந்த குதிரைப் படையின் பாதுகாப்புடன் அன்றைய தினம் அஸ்தமித்ததும் சக்கரவர்த்தி பின்வாங்கிச் செல்ல வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

''ஆனால், மேற்படி முடிவைக் காரியத்தில் நிறைவேற்ற அன்று சாயங்காலம் ஒரு பெரும் இடையூறு ஏற்பட்டது. மானவன்மரால் விசேஷப் போர்ப் பயிற்சி அளிக்கப்பட்டிருந்த பல்லவக் களிற்றுப் படையைக் கடைசியாக உபயோகிப்பதென்று வைத்திருந்து, அன்று சாயங்காலம் ஏவிவிட்டார்கள்.

ஐயாயிரம் மத்தகஜங்கள் துதிக்கைகளிலே இரும்பு உலக்கையைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டு சளுக்கர் குதிரைப் படை மேல் பாய்ந்தபோது, பாவம், அந்தக் குதிரைகள் பெரும் பீதி அடைந்து நாற்புறமும் சிதறி ஓடின. அந்தக் குதிரைகளைவிட வேகமாக எஞ்சியிருந்த சளுக்க வீரர்கள் ஓடினார்கள்.

அவ்விதம் புறங்காட்டி ஓடிய சளுக்க வீரர்களைப் பல்லவ வீரர்கள் துரத்திக் கொண்டு ஓடினார்கள்.

அந்த மூன்றும் நாள் இரவு முழுவதும் ஓடுகிற சளுக்க வீரர்களைப் பல்லவ வீரர்கள் துரத்திச் சென்று வேட்டையாடுதல் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

மறு நாள் சூரியோதயமானபோது, மூன்று தினங்கள் கடும் போர் நடந்த பயங்கர யுத்த களத்தில் இறந்து போன சளுக்கரின் உடல்களைத் தவிர உயிருள்ள சளுக்கர் ஒருவராவது காணப்படவில்லை.

வெற்றி முரசுகள் முழங்க, சங்கங்கள் ஆர்ப்பரித்து ஒலிக்க, ஜய கோஷங்கள் வானளாவ, ஒரே கோலாகலத்துக்கு மத்தியில் பல்லவ சக்கரவர்த்தியும் அவருடைய தளபதிகளும் ஒருவருக்கொருவர் வாகை மாலை சூடியும் வாழ்த்துக் கூறியும் பல்லவ சேனை அடைந்த மாபெரும் வெற்றியைக் கொண்டாடினர். எனினும், அவ்வளவு கோலாகலமான கொண்டாட்டங்களுக்கு மத்தியில் அவர்களுடைய உள்ளத்தில் ஒரு சிறு கவலை குடி கொண்டிருந்தது. அது சளுக்க சக்கரவர்த்தி புலிகேசியின் கதி என்னவாயிற்று என்ற கவலைதான். வாதாபிச் சக்கரவர்த்தி போர்க்களத்தில் இறுதி வரை நின்று போராடி உயிரிழந்து விழுந்து வீர சொர்க்கம் அடைந்தாரா, அல்லது சளுக்க வீரர் பலர் புறங்காட்டி ஓடிப் போனதைப் போல் அவரும் ஓடி விட்டாரா என்பது தெரியவில்லை. போர்க்களத்தில் அவர் விழுந்திருந்தால் மாபெரும் சக்கரவர்த்திக்குரிய மரியாதைகளை அவருடைய உடலுக்குச் செய்து கௌரவிக்க வேண்டும். ஒருவேளை அவர் ஓடிப் போயிருந்தால், மறுபடியும் படை திரட்டிக் கொண்டு போருக்கு வரக்கூடுமல்லவா?

(தொடரும்)



**பகற் கனவு!**

திகழ் எழிலில் ஏற்ற மிருந்தான்
புகழ் அறிவு ஆற்றலும் கொண்டான்
பகல் கனவில் காதலைக் கண்டான்
நிகழ் வாழ்வில் உணர்ந்தறியான்!

மேலட்டை வண்ணப்படம்: எஸ். என். ராவ்

# அணையா விளக்கு

மர்மக் கொலை, மதம் மாறிய காதல், ஒரு கல்யாணத்தை நிறுத்த, கன்னிப் பெண் தாயாகி விட்டதாக ஒரு புரட்டு. பெற்ற மகனே தந்தையைக் கொன்றுவிட்டதாக ஒரு பழி — அதுவும் தகப்பனார் விரும்பாத வேற்று மதப் பெண்ணைக் காதலித்து அவன் அவளுடன் வீட்டை விட்டு வெளியேறத் திட்டம் இட்டிருந்த தருணத்தில்...! படத்தில் ஒரு கொடூரமான கற்பழிப்பும் இருக்கிறது.

இஸ்லாமிய நெறிகளிலிருந்து இம்மியும் பிசகாத ஒரு முஸ்லிமாக எஸ். வி. சுப்பையாவைப் பார்க்கும்போது அந்தப் பாத்திரம் தான் நம் கண்ணுக்குத் தெரிகிறது!

சாஹுல் ஹமீதின் ஒரே புத்திரன் நைனு முகமதாக வருபவர் மு. க. முத்து. தந்தையை மீறிச் செயல்படவும், அதன் காரணமாகப் பல விதத்திலும் துன்புற்றுக் காதலியைப் பிரிந்து தவிக்கவும் நேரும் சந்தர்ப்பங்களில் தாம் ஏற்ற பாத்திரத்துக்கு நியாயம் வழங்க முயன்றிருக்கிறார்; சொந்தக் குரலில் பாடி ரசிகர்களை மகிழ்வித்திருக்கிறார்.

நைனு முகம்மதுவின் காதலியாக வந்து படத்தின் முக்கியமான திருப்பங்களுக்கெல்லாம் இடம் அளித்திருப்பவர் இளம் கதாநாயகி பத்மப்பிரியா. வனதேவதையைப் போல் வனப்பின் சிகரமாகப் படம் முழுவதும் வளையவரும் இவருக்குக் கண்ணீரில் கரையவும், கயவன் ஒருவனிடம் சிக்கி அவனது உடற்பசிக்கு இலக்காகித் துடிக்கவும், கடைசியில் தன்னைக் கெடுத்தவனை தீர்த்துக்கட்டி விட்டு மடியவும் திரைக்கதையில் சந்தர்ப்பங்கள் கிடைத்துள்ளன. பாத்திரத்தை நிலைநிறுத்தி நல்ல நடிப்புக்கு வழி காட்டியிருக்கிறார்.

கலைஞர் கருணாநிதி அவர்கள் பண்பட்ட திரைக் கதை ஆசிரியர், கலைக் கக்கும் வசனங்களைத் தீட்டிப் புகழ் பெற்றவர். அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியாகத் திருப்பங்களை விறுவிறுப்பாகப் புகுத்தி ரசிகர்களைத் திகைக்க வைத்திருக்கிறார் இப்படத்தில்! இந்தத் திகைப்புக்கும் வியப்புக்கும் விறுவிறுப்புக்கும் இடையில் கலைஞருக்கு ஒரு கேள்வி. பிள்ளையே பெறாத கன்னிப் பெண்ணைத் தாயாகக் காட்டி, அவள் பக்கத்தில் ஒரு சிசுவையும் விட்டு...! அப்படி எந்த லேடி டாக்டராவது அதுவும் ஓர் ஆஸ்பத்திரியில் செய்வாளா? பாதிக்கப்பட்ட பெண்ணின் பெற்றோர் கொதித்தெழ மாட்டார்களா? சட்டத்தின் உதவியை நாடி அந்த லேடி டாக்டரைச் சந்தியில் நிறுத்தி விட மாட்டார்கள்?

எம்.ஆர்.ஆர். வாசு ''அணையா விளக்''கின் அற்புத வில்லன். சதி தீட்டிக் கொலைக் குற்றத்தைப் பெற்ற மகன் தலையிலேயே சுமத்தும் முதல் வில்லன் அசோகன். நன்றாய் நடித்திருக்கிறார். இப்பொழுதெல்லாம் ஸ்ரீகாந்துக்குப் போலீஸ் அதிகாரி சான்ஸ் அடிக்கிறது. பொருத்தமாய்ச் செய்கிறார்.

அஞ்சுகம் பிக்சர்ஸாரின் ''அணையா விளக்''கில் மிக மிகப் பாராட்டப்பட வேண்டிய அம்சம், அமிர்தத்தின் ஒளிப் பதிவு. 'பியூஜி' கலர் கண்ணுக்கு விருந்தா யிருக்கிறது. துணிந்து படத்தை 'டிராஜெடி'யில் முடித்திருப்பது வரவேற்புக்குரியது. கிருஷ்ணன் பஞ்சுவின் டைரக்‌ஷன் பல நிகழ்ச்சிகளையும், பல திருப்பங்களையும் கொண்ட திரைக் கதையை விறுவிறுப்பாய் இயக்கி யிருக்கிறது.

கருத்தாழத்தையும், கலை நுணுக்கங்களையும் மட்டும் கருத்தில் கொண்டு தயாரிக்கப் பட்ட படம் அல்ல, ''அணையா விளக்கு!'' வசூலைப்பற்றியும் நன்கு சிந்தித்திருக்கிறார்கள்!

— காந்தன்






முல்லா நஸ்ருதீன் என்பவர் ஏதோ ஓர் அரபு நாட்டைச் சேர்ந்தவராம். அவரைச் சுற்றி ஏகப்பட்ட நகைச்சுவைக் கதைகள் வளர்ந்துவிட்டன. முல்லா ஒரு கற்பனைப் பாத்திரம். அவர் உலகில் பல இடங்களில் பல காலங்களில் வியாபித்து நகைச்சுவை வழங்குகிறார். முல்லா சிரிப்புக்களைத் தொகுத்து 'இத்ரீஸ் ஷா' என்பவர் புத்தகம் வெளியிட்டார். இதன்பிறகு இரண்டாவது தொகுதி வெளியாயிற்று. சமீபத்தில் லண்டனில் மூன்றாவது தொகுதி பிரசுரிக்கப்பட்டு இருக்கிறது. அதிலிருந்து சில முல்லாச் சிரிப்புக்கள்.

## ரேடியோ இங்கிலீஷ்

லண்டன் விமான நிலையத்தில் முல்லா நஸ்ருதீன் வந்து இறங்கினார்.

''எங்கிருந்து வருகிறீர்கள்?'' — விமான நிலைய அதிகாரி ஒருவர் கேட்டார். முல்லா ஆங்கிலத்தில் பதில் கூறினார்.

''இர்ர்ர்ர்ர் ... ஈழை நாட்டிலிருந்து.''

''பெயர்?''

''முல்லா ... ஸ்ஸர்ஸ்ஙிர் ... நஸ்ஸ்ருஊஊதீன்''.

''பேசுவதில் ஏதோ சிரமப்படுவது போல் தோன்றுகிறதே.''

''ந்ந்ந்நோஓஓஓ ... நோ.''

''பின் ஏன் அப்படிப் பேசுகிறீர்கள்?''

''பிப் ... பிப் ... பிப் ... க்ரா .. நான் ஆங்கிலம் கற்றுக் கொண்டது, ரேடியோ பாடங்கள் மூலம்!''

## சொன்னால் சொல்லியபடி

நஸ்ருதீன் ஒரு நண்பனின் வீட்டுக்குச் சென்றார். ''ஏதாவது சாப்பிடுகிறீர்களா?'' என்று அவர் கேட்டார்.

''கொஞ்சமாகக் கொடுங்கள்'' என்றார் முல்லா.

''ஒரு ஸ்பூன்தான்'' என்றார் நண்பர்.

பின்னர், ஒரு கப்பில் பாயசம் கொண்டு வந்தார். ஒரு ஸ்பூன் அளவுதான் இருந்தது!

இச்சமயம் வாயிலில் ஒரு பிச்சைக்காரன், ''ஐயா, சாமி!'' என்று குரல் கொடுத்தான்.

நண்பர் அவனைப் பார்த்துக் கோபமாக இரைந்தார்: ''போகிறாயா? இல்லை உன் கழுத்தை முறித்து விடட்டுமா?''

''ஏம்பா சீக்கிரம் போய் விடு'' என்று அவனைப் பார்த்து முல்லா கூறிவிட்டுத் தொடர்ந்தார்: ''ஒன்று மட்டும் நிச்சயம் சொல்வேன், இவர் எதையும் மிகைப்படுத்திச் சொல்ல மாட்டார்!''

## விடாது பறந்து கொண்டிருப்போம்

முல்லா பெரிய விமானம் ஒன்றில் பயணம் செய்து கொண்டிருந்தார். நான்கு எஞ்சின்கள் கொண்ட விமானம் அது.

திடீரென்று பைலட் ஒலிபெருக்கி மூலம் அறிவித்தார்: ''விமானத்தில் ஓர் இஞ்சின் பழுதாகி விட்டது. கவலைப்படாதீர்கள், இதனால், நாம் நாலைந்து நிமிடங்கள் தான் தாமதமாகப் போவோம்.''

பயணிகளில் சில பேர் முணுமுணுத்தார்கள். முல்லா ஆறுதலாகச் சொன்

னார்: "ஐந்து நிமிஷத்தில் என்ன வந்து விட்டது?"

சிறிது நேரம் கழித்து மற்றோர் அறிவிப்பு வந்தது: "மன்னிக்க வேண்டும். மற்றோர் எஞ்சினும் கெட்டுப் போய் விட்டது. இரண்டு எஞ்சின்களாலேயே விமானத்தை ஓட்டிச் செல்ல முடியும். ஆனால் அரை மணி நேரம் தாமதமாகி விடும்."

"அரைமணி தானே?... எப்படியும் ரயிலில் போவதைவிடச் சீக்கிரமாகப் போய் விடும். அரைமணி நேரம் ஆகாயத்தில் இருந்தால் என்ன குடிமுழுகிப் போய் விடும்?" என்று நஸ்ருதீன் கூறினார்.

சிறிது நேரம் கழித்து பைலட் அறிவித்தார்: "மன்னிக்க வேண்டும். மூன்றாவது எஞ்சினும் கெட்டுப் போய் விட்டது. சுமார் ஒரு மணி நேரம் தாமதமாகி விடும்."

முல்லா நஸ்ருதீன் இதைக் கேட்டு விட்டுச் சொன்னார்: "நாலாவது இஞ்சினும் கெட்டுப் போகக் கூடாது என்று பிரார்த்திப்போம். இல்லா விட்டால் நாள் முழுதும் பறந்து கொண்டே யிருப்போம்."

**மனைவியா ? செக்ரட்டரியா ?**

"இங்கிலாந்தில் ஒரு நல்ல பழக்கம் இருக்கிறது. அதை நான் காப்பி அடிக்கப் போகிறேன்" என்றார் முல்லா நஸ்ருதீன்.

"என்ன அது?"

"தங்கள் காரியதரிசிகளைப் பாரீசுக்கு அழைத்துச் செல்கிறார்கள், இங்கிலாந்து பிஸினஸ்காரர்கள். அவர்களைத் தங்கள் மனைவி என்று பாரீசில் சொல்லிக் கொள்கிறார்கள்."

"அப்படியா? உங்களிடம் செகரட்டரி கிடையாதே!"

"அதனால் என்ன? நான் செய்ய வேண்டியது, என் மனைவியைப் பாரீசுக்கு அழைத்துச் சென்று, அவளை என் காரியதரிசி என்று சொல்லிக் கொள்ள வேண்டும்!"

**போன வாரம் பார்த்திருக்க வேண்டும்**

நஸ்ருதீன், ஒரு கிரிக்கெட் பந்தயம் பார்க்கப் போனார். ஆயிரக்கணக்கான பேர் வந்திருந்தார்கள். டிக்கட் வாங்க முடியாத ஓர் ஆசாமி, நஸ்ருதீனிடம் சொன்னான்: "எனக்குப் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறது, என்ன கூட்டம், என்ன கூட்டம்!"

"தம்பி! நீ போன வாரம் வந்து பார்த்திருக்க வேண்டும்" என்றார் முல்லா.

"ஏன், இதைவிடக் கூட்டம் ஜாஸ்தியா?"

"இல்லை ... ஒரு ஈ, காக்கைகூட இல்லை. அன்றைக்குப் பந்தயம் இல்லை!"

**கேட்காதே ; கொடு !**

ரயிலிலிருந்து ஓர் ஆள் தவறிக் கீழே விழுந்து விட்டான். ரயில் பிளாட்பாரத்தில் இருக்கும் போது இது நடந்தது. ஆள் விழுந்த இடத்தைச் சூழ்ந்து கொண்டது, கூட்டம்.

"உன் கையைக் கொடு, தூக்கி விடுகிறோம்" என்று பலர் இரைந்தார்கள். ஆனால் அந்த ஆளின் கை உயரவில்லை.

கூட்டத்தை விலக்கிக் கொண்டு முல்லா சென்றார். "பிரதர்.... நீ எங்கு வேலை செய்கிறாய்?" என்று கேட்டார்.



"எப்படியாவது டி.வி.யில் பாட வேண்டுமென்ற ஆசை இப்போது நான் நிறைவேறியது !"

"நான் வருமான வரி இன்ஸ்பெக்டர்!"

"அப்படியானால், என் கையைப் பிடித்துக் கொள்."

ஆசாமி சட்டென்று கையைப் பற்றினார். அவரைத் தூக்கி நிறுத்தினார் முல்லா.

கூட்டத்தினரைப் பார்த்து முல்லா சொன்னார்: "முட்டாள்களே, வருமான வரிக்காரரைப் பார்த்து எதையும் கொடு என்று கேட்கக் கூடாது. பிடி என்று சொல்ல வேணும்."

**ஏமாற்று வேலை**

முல்லா நிறைய பணம் சேர்த்து விட்டார். துணிமணிகள் வாங்கச் சொன்னார்.

"ஃபாஷன் பரேட் நடத்துகிறார்களே அதற்குப் போய் வாருங்கள்" என்றார் ஒரு நண்பர்.

இவரும் போய்விட்டு வந்தார்.

"என்ன பிடித்து இருந்ததா உங்களுக்கு?" என்று நண்பர் கேட்டார்.

"சரியான ஏமாற்று வேலை அது."

"ஏன்?"

"அழகான பெண்களை மேடையில் காட்டுகிறார்கள். ஆனால் துணிகளை மட்டும் விற்பனை செய்கிறார்கள்!"

**நல்ல - கெட்ட சேதிகள்**

டீக்கடையில் முல்லாவின் பக்கத்தில் ஓர் ஆசாமி வந்து உட்கார்ந்தான். "அந்த மூலையில் உள்ள ஆசாமி ஏன் அழுது கொண்டிருக்கிறான்?" என்று முல்லாவைக் கேட்டான்.

"நான் அவனுடைய ஊரிலிருந்து இப்போதுதான் வந்தேன். அவனுடைய வைக்கோல் போர் எரிந்துவிட்ட சமாசாரத்தைச் சொன்னேன்."

"இந்த மாதிரி துயரச் செய்தியைத் தெரிவிப்பது கடினமான காரியம் இல்லையா?"

"இருக்கலாம். இப்போது அவனுக்கு ஒரு சந்தோஷமான தகவலையும் சொல்லப் போகிறேனே. வைக்கோல் போனதால் ஒட்டகங்களுக்கு என்ன போடுவது என்று அவன் கவலைப்பட வேண்டியதில்லை. பிளேக்கில் அவனது ஒட்டகங்கள் எல்லாம் இறந்து விட்டன."

**பயிற்சியின் பலன்**

"ஞாபக சக்தி வளரப் பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தீர்களே, ஏதாவது பயன் உண்டா ?"

முல்லா சொன்னார்: "பரவாயில்லை. ஏதோ மறந்துவிட்டேன் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடிகிறது !"

அவளுக்காக அவன் காத்திருந்தான்.

கடற்காற்று வீசியது. தூரத்தில் கடல் அலைகளின் இரைச்சல் கேட்டது. அதை மிஞ்சியது அருகே விளையாடும் குழந்தைகளின் ஆரவாரம்....

தினம் தினம் அவளுக்காகக் காத்திருந்தான். மெல்லிய முந்தானை காற்றில் சலசலக்க, கலைந்த முன் மயிர் நெற்றியில் விழுந்து கண்களை மறைக்க அவற்றை இடது கையால் ஒதுக்கியபடி, தன்னைக் கண்டதும் முகம் மலர்ந்து, முத்துப் பற்கள் தெரியச் சிரிக்கிற அந்த அழகைக் காண அவன் காத்திருந்தான்.

இரண்டு மாதங்களுக்கு முன்னால் ஒருநாள் எதிர்பாராமல் அவர்களைச் சந்தித்தான். அத் தம்பதியின் பொருத்தமின்மை உடனே அவன் உள்ளத்தில் பதிந்தது. அவர் பார்வை இழந்தவர். அவர் மனைவியோ—

மெல்லிய கொடி போன்ற உடல். இளமையின் அற்புதமான முதிர்ச்சியில் கடைந்தெடுத்த சிற்பம் போல் — சந்தன நிறத்தில் அவள் அழகே தனி. ரோஜா நிறத்தில் உதடுகள். சலனப்படும் அவள் விழிகள்; தன்னைப் பார்க்கிறபோது, பட்டென்று இரத்தம் ஏறிச் சிவந்து போகிற கன்னங்கள். ஆனால்... அவளது பெரிய கண்களில் சதா படர்ந்து நிற்கிற சோகம்....

குருடர் - அதை மறைக்கிற அந்தக் கறுப்புக் கண்ணாடியோடு, பட்டும் படாமலும் நடக்கிற நடையில், அவரது இடது கை விரல்களைப் பற்றி, தனது பொன்னிறப் பாதங்களை அழகு செய்கிற கறுப்பு ஸ்லிப்பர்கள் கடற்கரை மணலில் புதையப் புதைய....

அதோ... அவன் தன் கண்களில் தோன்றிய ஒளியுடன் எழுந்து நின்றான்.

"குட் ஈவினிங் ராஜ்..." அவள் சொல்கிறாள்.

"குட் ஈவினிங்..." அவன் அவளை அப்படிப் பார்த்தபடி சொல்கிறான். "குட் ஈவினிங் சார்...."

"ஹலோ... குட் ஈவினிங் மிஸ்டர் ராஜ்." குருடர் மிருதுவாகச் சொல்கிறார், "இன்னிக்கு நாங்கள் லேட் இல்லையா?"

"ஆமாம், சார்.... ஆனால் நான் இன்னிக்கு ரொம்ப சீக்கிரமா வந்துவிட்டேன்..." அவன் சொன்னான்.

"ஆமாம். டாக்ஸி கிடைக்கலே" என்கிறாள் அவள்.

அவன் அவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

".....ராஜ், நேற்று அந்தச் சினிமா பார்த்தீர்களா?" குருடர் கேட்டார்.

"போயிருந்தேன், சார். அருமையான படம்."

"என்னால் பார்க்க முடியாதே." அவர் பெருமூச்சுடன் சொன்னார்.

"நீங்கள்...?"

"நான் பார்க்க முடியும். ஆனால் அனுபவிக்க முடியாது....." அவள் சொன்னாள்.

"ஏன்?"

"ஏனோ ?"

அவள் அமைதியானாள். அவள் கண்கள் கடலுக்கு அப்பால் தொடுவானை வெறித்தன. அங்கே கட்டுமரங்களின் பாய்மரக் கூம்புகள் மெல்ல நகர்ந்தன.

"....ஏன் நிறுத்திட்டே கமல் ?" என்று குருடர் அவளிடம் கேட்டார்.

"இல்லே.... அவ்வளவுதான். வேறு அதற்கு மேலே என்ன சொல்றது — தெரியலே....." அவள் சொன்னாள். அவளது மெல்லிய விரல்கள் தம் விரல்களை அழுந்தப் பிடிப்பதை உணர்ந்தார்.

அவன் அவளை இன்னும் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் நினைப்பது என்னவென்று அவனுக்குத் தெரியும். அவள் எல்லாவற்றையும் பார்க்க முடியும் — அவள் கணவரைப் போலல்ல அவள். ஆனால் அவளால் அவற்றை அனுபவிக்க முடியாது. அவருக்குக் கண்கள் இருண்டு போனது போல், அவளுடைய இதயம் இருண்டு கிடந்தது!

"எனக்குத் தெரியும்." ராஜ் சொன்னான்.



அவள் மெல்லிய அதிர்ச்சியுடன் அவனைத் திரும்பிப் பார்த்தாள். அந்தக் கண்கள் பேச வேண்டாம் என்று அவனிடம் கெஞ்சின.

''வேண்டாம், ராஜ்.... நீங்கள் சொல்ல வேண்டாம். நான் சொல்கிறேன்... கமல்.''

''அதோ, அங்கே போய் உட்காரலாம்'' என்றாள் கமல்.

''கமல், நீ...!''

''...போதுமே உங்கள் கேலி.... இன்னும் பத்தடி தூரம் இப்படியே போனால் கடலில் இறங்க வேண்டியதுதான்.....'' அவள் சொன்னாள்.

குருடர் தம் காதுகளால் கடலலைகளின் ஓசைகளை மிகச் சமீபமாகக் கேட்டார். அதே சமயம் ஒரு பெண்ணின் மனத்துக்குள் எழுந்து அலைமோதும் எண்ணங்களின் சத்தத்தைக் கேட்க அவரால் முடிந்ததோ என்னவோ ?

அவள் தன் விரல்களை அவரிடமிருந்து விடுவித்துக் கொண்டாள். குருடர் மணலில் அமர்ந்தார்.

''கமல்! நீ வேண்டுமானால் ராஜுடன் கடலோரம் வரையில் போய் வாயேன்......'' என்றார் அவர்.

''வேண்டாம்.''

''பரவாயில்லே.... உனக்குத்தான் கடல் அலையிலே நிற்கிறது பிடிக்குமே!''

அந்தப் பொன்னிறப் பாதங்களும், சற்றே தூக்கிச் செருகியதால் அற்புதமாய்த் தெரிகிற கெண்டைக் கால்களும் அலைகளால் மோதப்படுவதை இவரால் பார்க்க முடியாதே என்று அப்போது நினைத்துக் கொண்டான் ராஜ். அப்போது அந்த மனிதருக்காக அவன் உண்மையாகவே வருத்தப்பட்டான். ஆனால், இன்று அவர்கள் முடிவு செய்ய வேண்டும்....

அவன் கமலையும் அந்தக் குருடரையும் முதல் தடவை சந்தித்ததே ஓர் ஆச்சரியம்...

ராஜ் எப்போதாவதுதான் கடற்கரைக்கு வருவான்.

இப்படி வந்த ஒரு நாள்.

அவன் அந்தச் சாலையில் ஏறி நடந்தபோது அவளை — கமலையும், அந்தக் குருடரையும் பார்த்தான். அவர் ஒரு கனவானைப்போல் உடுத்தி யிருந்தார்.

அவருக்கு நாற்பது வயது இருக்கும். கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தார். மகளோ.... ஆனால், இத்தனை நெருக்கம் தேவை இல்லையே.....

அவர்கள் சாலையைக் குறுக்கே கடந்த போது, அவளுடைய கைக்குட்டை காற்றில் பறந்தது. ''கர்சிப் விழுந்துடுத்து.....'' என்றாள்.

''எடு, காற்றிலே ஓடிடும்....''

அவள் இரண்டு அடி ஓடினாள். அவள் ஓடுவதே ஓர் அழகாக இருந்தது. அந்தக் கறுப்பு ஹைஹீல் செருப்புகள் 'டக்டக்' என்று சத்தம் எழுப்பின. ஓடிய வேகத்தில் அவளுடைய மெல்லிடை அழகாக அசைந்தது.

திடீரென்று அவரை நோக்கி ஒரு பஸ் வந்தது. பஸ்ஸின் ஹாரன் அலறியது. அவர் பஸ் தம்மை நோக்கி வருவதை அறிந்தார். ஆனால் எங்கே ஒதுங்கி நிற்பது என்று புரியாத குழப்பத்தில் சற்றுத் தடுமாறி நகர்ந்தார்.

அவள் கைக்குட்டையை மறந்து அவரை நோக்கி ஓடிவந்தபோது, அவன் — ராஜ், அந்த மனிதரை பஸ்ஸுக்கு ஒதுக்கிச் சாலை ஓரம் அழைத்துச் செல்வதைக் கண்டாள்.

அவருடைய தடுமாற்றமே அவரொரு குருடர் என்பதை அவனுக்குக் காட்டிக் கொடுத்து விட்டது.

''தேங்க்யூ... தேங்க்யூ...'' என்று படபடப்புடன் சொல்லி, தனது நீண்ட விரல்களால் தன் நெஞ்சில் அழுத்திக் கொண்டாள் அவள்.

அவளுடைய தவிப்பை அவன் ரொம்ப ரசித்தான். அவளோ உணர்ச்சி வேகத்தில்






# ஊன்றுகோல்!

—நாகை.பு.ஜீவா—

சிவந்து கனியும் முகத்தோடும், அவனது பார்வையைத் தாங்க முடியாத படபடப் போடும் கண்களைத் தாழ்த்திக் கொண்டாள்.

அவர் தமக்குப் பத்து வருடங்களுக்கு முன் கண் குருடான வரலாற்றையும், தம் வேலைக் காரனுடைய மகள் கமலாவை மணந்து கொண்டதையும் சொன்னார்.

''கமலாவுக்கு நான்தான் கமல்நயனனு பேர் வைச்சேன்.... அவள் கண்கள் அழகாய் இருக்கும் இல்லையா?'' அவர் கேட்டார். ''...நான் அவளைப் பார்த்ததில்லை...ஆனால் என் விழிகள் இவள்...''

''வெரி ஃபைன்... நீங்க சொன்னது ரொம்ப சரி!'' தன் குரலின் கிளர்ச்சியை அவனால் மறைத்துக் கொள்ள முடியவில்லை.

அவர் புன்னகை செய்தார்.

அவள் நாணத்துடன் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

அவர்களுடன் கொஞ்ச தூரம் அவனும் நடந்தான். அவர்களை டாக்ஸியில் ஏற்றி அனுப்பினான். மறுநாளும் பார்த்தான்.

காத்திருந்தான்...

மறுநாளும்.. அதற்கு மறுநாளும் அவர் களுக்காக — அல்ல, அவளுக்காக அவன் காத் திருந்தான். தினம் காத்திருந்தான்....

கடலலை அவளுடைய பாதங்களைத் தழுவி ஓடும்போது, சற்றே நனைந்து படபடக்கிற சேலையின் ஓரத்தை அவன் வேடிக்கை பார்த் துக் கொண்டிருந்தான். கணுக்காலுக்கு மேலே தந்தத்தில் இழைத்தது போன்ற அந்தக் கால்களில்...

''...கமல்...''

அவன் மெதுவாக அவளது விரல்களைப் பற்றினான். ''...நீங்கள் எங்கே சொல்லி விடுவீர்களோ என்று பயந்தேன்...'' அவள் சொன்னாள்.

''என்ன?''

''நான் பார்க்க முடியும் அனுபவிக்க முடி யாது என்று சொன்னேன்...'', அவள் சொன்னாள்.

''நான் சொல்லா விட்டால் என்ன? அவ ருக்கே அது தெரியும்.''

''சொல்ல வேண்டாம். அவருடைய இத யம் மென்மையானது...''

''...கூர்மையானது...''

''ஆமாம்....''

வேகமான அலையில் அவளுடைய முழுங் கால்வரையில் புடவை நனைந்தது.

''கமல்...''

''....ம்....''

''சீக்கிரம் முடிவெடுக்க வேண்டும்.''

அவள் கடலலைகளை வெறித்துப் பார்த் தாள். நீல நிறக் கடலில் அலைபாய்கிற வெள்ளை நுரைகள்.

''...அவரைத் தவிக்க விட்டு...''

''உன்னுடைய தவிப்பு அதைவிடக் கொடு மையாக இருக்கிறது. அவருடைய கண்களை விட உன் இதயம் இருண்டு கிடக்கிறதே. கமல்... வாழ்க்கையில் உறுதியாக முடி வெடுக்க வேண்டிய நேரம் இது!'' ராஜ் சொன்னான்.

''ஆம், தெரிகிறது. நானும் அவரைப் போலவே குருடாக இருந்தால்...? எனக்குக் கண்கள் இருக்கின்றன. இந்த உலகத்தைப் பார்க்க... பின்னால் நடக்கப் போவதை நினைத்தால்....'' அவள் கண்களில் அச்சத் தின் சாயல் தெரிகிறது. ''...ராஜ்...'' அவள் அவனது விரல்களை இறுகப் பற்றினாள்.

''முடிவெடுக்க வேண்டிய நேரத்தில் அச்சம் இருக்கவே கூடாது கமல்... அதைப் போலத் தான் முடிவை நிறைவேற்றவும் தயக்கப் படக் கூடாது...''

''நான் உங்களைப் போல் அல்ல; பெண்... தோல்விகளைத் தாங்கிக் கொள்ளும் சக்தி எனக்கில்லை.... என்னுடைய முடிவுகளையும் நீங்களே தீர்மானியுங்கள்... உங்கள் பொறுப் பில் விட்டு விட்டேன்.'' அவள் சொன்னாள்.

அவன் திரும்பி அவளைப் பார்த்தான். அவளுடைய கண்கள் கலங்கி இருந்தன... அவள் என்னதான் நினைக்கிறாள்?

''எனக்காகத்தான்'' என்றாள் அவள்.

ராஜ் அந்தக் குருடரை நோக்கிச் சென் றான். அவர் அருகே நின்றான்.

''ராஜ்...?''

''நான்தான்.''

''கமல் எங்கே?''

''அதோ கடல் அலைகளில் நிற்கிறாள்.''

அவர் சொன்னார்: ''கடல் அலைகளில் கால் நனைய நிற்பது அவளுக்கு ரொம்பப் பிடிக்கும். வந்து மோதுகின்ற அலைகளில்...''

''உங்களுக்கு?''

''எனக்குள்ளே வந்து மோதுகின்ற அலை களில் நான் சதாவும் நனைந்து கொண்டிருக் கிறேனே... அலைகள் அவள் கால்களில் மோது கின்றன; எனக்கோ, என் இதயத்தில்...''

ராஜ் கண்களைத் திருப்பிக் கொண்டான். அந்த நேரம் தன் இதயம் படபடப்பதைக் கண்டான். அவர்களுக்குப் பின்னால் கமல் நின்று கொண்டிருந்தாள்.

ராஜ் அனுப்பும் செய்திக்காக அவள் காத் திருந்தாள்.

அவரை — அந்தக் குருடரைப் பிரிந்து போக வேண்டிய ஏற்பாடுகளுடன், மாடி அறையில் இருந்து பார்த்தபோது அவர் தமது அறையில் கடற்கரைக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தார். உலகத்தைப் பார்க்க முடியாமல் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்கும் அவருக்கு அங்கே—கடற் கரைக்குப் போவது ஒன்றுதான் பெரிய பொழுதுபோக்கு.

அவள் காத்திருந்தாள்.

''புறப்படலாமா?'' அவர் கேட்டார். கீழ் ஹாலில் நின்றபடி, தலையை உயர்த்தி அவர்

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

**பொடி வைத்துப் பற்பொடி பெயர்!**

திருச்சி கடைகளில் விற்கப்படும் ஒரு பல்பொடிக்குப் பெயர்: 'பாடாவதி' பற்பொடி!

இதற்கு ஏன் இப்படிப் பெயர் வைத்தார்கள் என்று கேட்டதற்கு ஒரு கடைக்காரர் கூறிய பதில்: ''இந்தப் பற்பொடி 'பாடாவதி' பற் களைக்கூடச் சுத்தமாக்கிவிடும் என்பதால் இப்பெயர் வந்தது!''

கேட்டவர்: சம்பத்குமார்



கேட்டபோது அவரது கறுப்புக் கண்ணாடி பளபளத்தது.

அவள் கையில் சூட் கேசுடன் இறங்கி வந்தாள். ஓசைப்படாமல் அதைச் சோபாவின் அருகே வைத்துவிட்டு அவர் அருகே வந்து நின்றாள்.

''போகலாமா?''

''கொஞ்ச நேரம்...''

''ஏன்?''

அவள் பதில் சொல்லவில்லை.

''... ஏன்?''

அப்போது வாசலில்டாக்ஸி வந்து நின்றது.

''அதென்ன — டாக்ஸியா?''

''...உம், ஆமாம்...''

''...யார், ராஜ்?''

''...நோ... நான்தான் வரச்சொல்லியிருந்தேன்...''

''எதற்கு?''

அவள் தயங்கினாள்.

''...கமல்...''

''...பிக்சருக்கு... சினிமாவுக்குப் போகலாமென்று...'' அவள் சமாளித்தாள்.

''...நானுமா? நான் எதற்கு?''

மீண்டும் மௌனம்.

''நான் வேண்டாம் கமல்... நீ போய் வா. வேண்டுமானால் போகும்போது ராஜ்-அவரைத் துணைக்கு அழைத்துப் போ.''

''அவர் பார்த்து விட்டார்.''

''சொன்னாரே. ஆனால், உன்னுடன் பார்ப்பது அவருக்குப் பிடிக்கும்.''

அவள் தலையைத் திருப்பிக் கொண்டாள்.

''கமல்...''

''சரி'' என்றாள்.

அவள் வெளியே போனாள். டிரைவர் காரில் அமர்ந்திருந்தான். ''அம்மா, ராஜ் அனுப்பினார்.. உங்களுக்காக அவர் அங்கே காத்திருக்கிறாராம்...''

சூட்கேசைக் காரில் வைத்தான்.

''...நான் வரட்டுமா?''

அவள் அவரருகே வந்தாள். அவர்—அந்தக் குருடர் ஃபானுக்குக் கீழே நின்றிருந்ததால் அவருடைய முன் முடி கலைந்து நெற்றியில் அலை பாய்ந்தது. அவருக்குத் தலை வாரி விடவில்லையே. தினம் அவள் செய்வாள்.

''...கமல்...''

அவள் தடதடவென்று படியேறி மாடிக்கு ஓடினாள். கையில் சீப்புடன் திரும்பினாள்.

''தலை வாரட்டுமா?''

அவர் புன்னகை செய்தார்.

''நான் உன்னுடைய உதவிக்காகக் காலமெல்லாம் காத்திருக்கிறேன்.... நீ இல்லாவிட்டால்... என்னாலே அதைக் கற்பனை செய்து பார்க்கவே முடியாது...'' அவர் சொன்னார்.

அவள் மௌனமாகத் தலைவாரினாள்.

''...ஆமாம், கமல்... உன்னை, உன் மெல்லிய விரல்களை, கண்களை — உன் கண்களைப் பற்றி ராஜ் சொல்லி யிருக்கிறார் — இந்தக் கைகளை...'' அவர் கையைப் பற்றினார்..

''கமல், ஏன் உன் கை நடுங்குகிறது?''

அவள் கண்களில் தேங்கிய கண்ணீர் மெல்ல உதிர்ந்தோடியது.

''நீ அழறியா என்ன?''

''இல்லே...''

**ஒல்டானுக்கு**
**ஓர்**
**ஒல்டான்**



தஞ்சாவூரிலிருந்து வடுவூர் செல்லும் டவுன் பஸ்ஸில் கண்டக்டர், ''ரைட்'', ''ஹோல்டான்'', போன்ற வார்த்தைகளைப் பயன்படுத்துவதில்லை. அதற்கும் பதில் பஸ்ஸை நிறுத்த, ''ராம்'' என்றும், கிளம்புவதற்கு, ''ராம், ராம்'' என்றும் கூறுகிறார். வடுவூரில் ஸ்ரீ கோதண்டராமர் கோயில் உள்ளதே இதற்குக் காரணம் போதும்!

கேட்டு எழுதியவர்: ரிஷபன்பாபு

''...இப்போ நிறையப் பொய் சொல்றே.. நேரமாகிறது. நீ புறப்படு.''

அவள் தளர்ந்து போய் டாக்ஸியை நோக்கிச் சென்றாள். அவன் டாக்ஸிக் கதவைத் திறந்தான்.

''கமல்...''

அவர் கதவருகே நின்றார்.

''கமல்....நீ டாக்ஸியில்தானே போகிறாய்? போகும்போது என்னைக் கொண்டுபோய்க் கடற் கரையிலே விட்டு விட்டுப் போய்விடு... அந்த சிமெண்ட் பெஞ்சு கிட்டே... நீ பிக்சர் முடிஞ்சு திரும்பி வரும்போது என்னையும் அங்கே யிருந்து திரும்ப அழைச்சுக்கிட்டு வரலாம்... நீ இல்லாமல் கடற் கரையிலே இருந்து பழக்கப்படுத்திக் கொள்கிறேனே... என்ன?'' அவர் கேட்டார்.

''வந்து...''

''சிரமம்தான். ஆனால் நீ திரும்பி வரும் வரைக்கும் இங்கே தனியா மொட்டு மொட்டென்று....''

''சரி'' என்றாள் கமல்.

அந்தக் குருடர் காத்திருந்தார். நேரம், காலம் உணர முடியாத இருளில் — அமைதியில். அவர் சோபாவில் சாய்ந்து கிடந்தார். தலைக்கு மேல் 'கிர்ர்ர்'ரென்ற ஓசையுடன் இயங்கிக் கொண்டிருக்கும் ஃபானின் காற்றில் கலைந்து போன அவரது கேசச் சுருள் ஒன்று மெல்ல அசைந்தாடிக் கொண்டிருந்தது.

அவரது இமைகள் கீழே சரிந்தன. எப்போது அவள் வருவாள்? வருவாளா?

வாயிலில் கார் வந்து நிற்கும் சத்தம். அவர் கூர்ந்து கவனித்தார். கனத்த காலணிகளின் ஓசை கேட்டது. யார் யாரோ நாலைந்து பேர் வருகிறார்கள். என்னவோ பேச்சுக் குரல்...

அமைதி.

''யார்?'' குருடரின் கை விரல்கள் முன்னே நீண்டன.

மௌனம். நீண்ட மௌனம். அந்த மௌனத்தில் இழையோடும் சங்கட பாவனையைக்கூட அவரால் உணர முடிந்தது. அந்த மௌனத்தைக் கலைக்கும் மெல்லிய விசும்பல்....

# "செழுமையான நீண்ட கேசம்-சின்னஞ்சிறு வாதுமை வழங்கிய சீதனம்" என்கிறார் எக்ஸ்-போர்ட் ஹவுஸ் நிர்வாகி அனிடா ராபின்ஸ்




அதனால்தான், பழங்கால விஜய நகர சாம்ராஜ்யத்து ராணிகளின் கூந்தல் கணுக்கால் வரை நீண்டிருந்ததாம். தேங்காய், நிலக்கடலை, ஆமணக்கு ஆகியவற்றைவிட வாதுமையின் ஊட்ட குணங்கள் மிக மேம்பட்டதென அவர்கள் அறிந்திருந்தார்கள்.

இன்று ரோமம் உதிர்வதைத் தடுத்து உங்கள் கேசத்தை பளபளக்கும். ஆரோக்கியமுடன் வைத்திருக்க வாதுமையின் அதே ஊட்ட குணங்களை நீங்கள் பயன்படுத்த முடியும். இரவிலும் காலையிலும் லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயிலைத் தலையில் தேய்த்து உள்ளிறக்குங்கள். இரவிலே அது மயிர்க்கால்களுக்கு ஊட்டமளித்து ஊக்குவிக்கும். பகலிலே உங்கள் கேசத்தைப் படிமானமுடன் பாங்காக வைத்திருக்கும். நல் வனப்புத் தோற்றத்தையும், ஆரோக்கியமான கேசத்தையும் விரும்பும் ஆண் பெண்கள் யாவருக்கும் அத்தியாவசியமானது இனிய மணமூட்டப்பட்ட லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

என் கூந்தலழகுக்குக் கவர்ச்சியூட்டுகிறது லியூர்-ஆரோக்கிய மெருகுமிளிர அதனை வைத்திருப்பது லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

**லியூர்**

Creative Unit A 1906

''யார்? கமல், நீயா?'' அவர் அதிர்ந்தார்.

அவள் தன் விசும்பலைச் சிரமப்பட்டு அடக்குவது தெரிந்தது.

''சார்...'' காலணிகளின் சரக்கென்ற ஓசை.

''யார்?.....''

''சார்... நான் மோகனரங்கம். போலீஸ் இன்ஸ்பெக்டர். உங்களைப் பார்க்க வந்தேன். ஒரு தகவல் தேவை. வெரி சாரி சார்.... இதோ, இவன்... ராஜ்...''

''ராஜ்...?''

''ஆமாம். உங்கள் வீட்டு நகைகளைத் திருட்டுத்தனமாக விற்க முயன்றபோது போலீஸில் மாட்டிக் கொண்டான். பல ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ளவை. விசாரணையில் உங்கள் மனைவி கமல் அந்த நகைகளைத் தன்னிடம் கொடுத்து விற்கச் சொன்னதாகச் சொன்னான். எங்களுக்குச் சந்தேகம் வந்தது. அவன் கொடுத்த தகவலின்படி மதுரையில் ஒரு லாட்ஜில் தங்கியிருந்த உங்கள் மனைவியைக் கண்டுபிடித்தோம். அவர் இந்த ராஜ் என்பவனால் ஏமாற்றப்பட்டிருக்கிறார் என்று நினைக்கிறேன்.''

குருடரின் முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் மோகனரங்கத்தால் காண முடியவில்லை. உள்ளே வந்ததும் அவரைக் குருடர் என்று கண்டு கொண்டதால் அவர் மனம் நெகிழ்ந்திருந்தார். ''சார்...''

''கமல் என்ன சொல்கிறாள்?''

''ஒரு தகவலும் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஹோட்டல் ரிஜிஸ்தரில் இவர்கள் இருவரும் தங்களைக் கணவன் மனைவி என்று பதிந்து கொண்டிருக்கிறார்கள். தங்கிய இரண்டொரு நாட்களிலேயே இந்த ராஜ் நகைகளையும் பணத்தையும் சுருட்டிக் கொண்டு தலைமறைவாகி விட்டான் என்று புரிகிறது. லாட்ஜ் பில்லைக்கூடக் கட்ட வழியில்லாத நிலையில் உங்கள் மனைவி தவித்துக் கொண்டு இருந்தபோது நாங்கள் போய்ச் சேர்ந்தோம்...'' மேலே பேசுவதற்குச் சங்கடமாக இருந்ததால் நிறுத்திக் கொண்டார்.

அங்கே நிலவிய அமைதியைக் கமலின் விசும்பல் மட்டுமே கலைத்தது.

''சார்...''

''இன்ஸ்பெக்டர், இவை என் மனைவியின் நகைகள். அவள் அவற்றைத் தான் விரும்புகிறவருக்குக் கொடுக்கலாம். அதனால்...''

''இவர் விரும்பிக் கொடுக்கவில்லை. திருடிக் கொண்டு ஓடியிருக்கிறான்.''

''அப்படிக் கமல் ரிப்போர்ட் கொடுத்தாளா?''

''இல்லை.''

''ராஜ் போகட்டும் — அவரை விடுங்கள். கமல் நீயும் போகலாம். இதோ உன் நகைகள்.''

கமல், ''தெய்வமே'' என்றபடி அவரது காலடியில் விழுந்தாள். அவர் அமைதியாக அமர்ந்திருந்தார். அவளுடைய தேம்பல் சத்தம் மெல்ல மெல்ல மங்கியது.

''இன்ஸ்பெக்டர்...''

''சார்...''

''உங்களுக்கு ஏற்பட்ட சிரமங்களுக்கு மனப்பூர்வமாக இவர்களை மன்னியுங்கள். ஒரு குருடனோடு சேர்ந்து வாழ்வது இளம் பெண்ணுக்கு எத்தனை சிரமம் என்று உங்களுக்கே தெரியும்... அதனால் அவன்... ...ராஜ்! நீங்கள் தேவையானதை எடுத்துக் கொள்ளுங்கள். போய் வாருங்கள்... குட்பை மிஸ்டர் ராஜ்...''

ராஜ் குனிந்தபடி வெளியேறினான்.

''கமல், நீ... நீ மீண்டும் இப்படி ஏமாந்து போகாதே. நான் குருடன். நான் தேர்ந்தெடுத்த துணை — ஊன்றுகோல் சரியில்லாமல் போகலாம். ஆனால், கண்ணுள்ள நீ சரியான துணையை — ஊன்றுகோலைத் தேர்ந்தெடுக்கத் தவறினாயே... எத்தனை பெரிய ஆபத்தைத் தேடிக்கொள்ள இருந்தாய்... பெரிய ஏமாற்றம் இல்லையா உனக்கு...? ஆயினும் இப்போது கூட நேரம் கடந்து விடவில்லை....நீ...நீ விரும்பினால்...''

அவள் எழுந்து உள்ளே ஓடினாள். அறைக் கதவுகள் மோதி அதிர்ந்தன.

''மிஸ்டர் இன்ஸ்பெக்டர்...''

''ஐ ஆம் ஸோ ஸாரி, சார்!'' மோகனரங்கத்தால் பேசவே முடியவில்லை. ''யூ ஆர் எ ஜெண்டில்மேன்... உடலின் கண்கள் ஒளியற்றுப் போனாலும், உங்கள் உள்ளத்தின்— ஆத்மாவின் கண்கள் பிரகாசமாக இருக்கின்றன. நாங்கள் கண்ணுள்ளவர்கள் — உடலின் கண்களால் உடலைப் பார்த்தோம். நீங்களோ —கண்ணற்றவர் — ஆத்மாவின் கண்களால் ஆத்மாவையே பார்க்கிறீர்கள்...''

அந்த முரட்டு விரல்கள் அந்தக் குருடரின் மென்மையான விரல்களைப் பற்றின.

''கமல்...''

மௌனம்.

''கமல், நீ எங்கே?... உன்மீது எனக்குக் கோபமில்லை. நீ ஒரு குழந்தையைப் போல் நடந்து கொண்டாய்.''

கட்டில் காலியாக இருந்தது.

''கமல், என்மீது உனக்குக் கோபமா? நான் ஒரு குருடன். உன் மனித உணர்ச்சிகளைக் காணத் தவறிவிட்டேன்.... அது என் தவறுதான். ஆனால்....''

மௌனம்.

''கமல்....!''

அவர் நகர்ந்தார். ஏதோ நெற்றியில் இடறியது. நின்று நிதானித்தார். நெற்றியைத் தடவி — கைகளை வீசியபோது எதையோ அவரது விரல்கள் பற்றின.

கால்கள் .... தொங்கி ஊசலாடும் ஒரு ஜோடிக் கால்கள். அவை குளிர்ந்து மரக்கட்டையாகி விட்டிருந்தன.



பம்பாயிலிருந்து பரோடா செல்லும் விமானம் அன்று குறிப்பிட்ட நேரத்தில் கிளம்ப முடியவில்லை. காரணம் தேனீக்களின் தொல்லை! தீயணைக்கும் படையினர்கூட உதவிக்கு வந்து எவ்வளவு தண்ணீரைக் கொட்டியும் தேனீக்களின் அட்டகாசம் பொறுக்க முடியவில்லை! தாமதம் செய்ய விரும்பாமல் குறிப்பிட்ட விமானத்திலிருந்து பிரயாணிகளை இறக்கி வேறு விமானத்துக்கு மாற்றினர்!

ஆதாரம்: டெக்கான் ஹெரால்ட்

எழுதியவர்: ஆர். பாஸ்கர்

# 6. பாரிபூர் மகாராணி

''ஹலோ, ரமேஷ் வந்து விட்டாயா?'' என்று உற்சாகமாக வரவேற்றாள் தாரிணி. நீல நிற ஸாட்டின் மாக்ஸியில், தங்கரேக்குகள் மின்ன, லாவண்டர் மணக்க, கூடைக் கொண்டையும், நெடிய கழுத்துமாக நின்றாள் அவள்.

இந்தத் தோளிலிருந்து அந்தத் தோள்வரை கீழாக வெட்டிய அரை வட்டமாக ஒரு சோளி இடுப்பில் பட்டையாகச் சிக்கென்று பிடித்து அவள் வனப்பைப் பன்மடங்கு அதிகமாக்கிக் காட்டிற்று. கைகளைத் தங்க வளையல்களும், கழுத்துப் பட்டையை நெக்லசும் அலங்கரித்தன. வலக்கையை உயர்த்தி, நடுவிரலில், நாவற்பழ அளவில் நீலமாகச் சுடர்விட்ட அந்த வைர மோதிரத்தை ஒரு தடவை பெருமையுடன் பார்த்துக் கொண்டாள்.

வராந்தா முழுக்க ஆங்காங்கே விருந்துக்கு வந்தவர்கள் கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். எல்லோருடைய பார்வையும் தாரிணி தேவியின் மீதே சுழன்று நகர்ந்து கொண்டிருந்தன.

''எங்கே வராமலிருந்து விடுவாயோ என்று நினைத்தேன். எல்லாரும் வந்து விட்டார்கள். மகாராஜா கூட எப்போதோ வந்து விட்டார். அந்த ராங்கிக்காரி தான் இன்னும் வரவில்லை. ஆமாம். உங்க பிரஸ் போட்டோகிராபர் வரவில்லையா?''

''வந்திருக்கிறார். கீழே பில்லியர்ட்ஸ் அறையில் படம் எடுத்துக் கொண்டிருக்கிறார்—''

''அதை எதற்காகப் படம் எடுப்பது? நான்சென்ஸ்!''... ஒரு வரி பில்லியர்ட்ஸ் ஆட்டம் பற்றி நாளைய பேப்பரில் வரக் கூடாது, சொல்லி விட்டேன், ஆமாம்'' என்றாள் தாரிணி தேவி கடுகடுப்புடன்.

ரமேஷ் பேசாமல் இருந்தான். ''என்ன பேசாமல் இருக்கிறாய்?'' என்றாள் தாரிணி தேவி. ''நான் சொன்னபடி செய்தால் உனக்கு உன் தங்கையைப் பற்றி ஒரு முக்கியமான 'க்ளு' கொடுப்பேன்!''

ரமேஷ் சிலிர்த்துக் கொண்டான். ''அவள் உயிரோடு இருக்கிறாளா? எங்கே இருக்கிறாள்? உங்களுக்குத் தெரியுமா?'' என்று அடங்காத ஆவலுடன் கேட்டான்.

''தெரியும்'' என்று ஒரே வார்த்தை சொல்லி விட்டுக் கம்பீரமாக முன்னால் நடந்தாள் தாரிணி தேவி.




ரேகா சந்திரநாத்

''மேடம்—ஒன் மினிட்'' என்று சொல்லிக் கொண்டே அவள் பின்னால் விரைந்தான் ரமேஷ்.

ஜன்னலோரமாகப் போய்ப் பட்டுக் கைக் குட்டையில் மூக்கைச் சிந்துவதாகப் பெயர் பண்ணிவிட்டுத் திரும்பிய தாரிணி தேவி, ''என்ன?'' என்று அலட்சியமாகக் கேட்டாள்.

''என் தங்கை இப்போது எங்கே இருக்கிறாள்?''

''ஓர் இரகசியமான இடத்தில் —''

''எங்கே இருக்கிறது அந்த இடம்?''

தாரிணி சிரித்தாள். ''பத்திரிகையாளரே! அதை இப்போது சொல்ல மாட்டேன். பில்லியர்ட்ஸ் செய்தியை இருட்டடிப்பு செய்து விட்டு, என் விருந்தை 'ஃப்ளாஷ்' பண்ணி விட்டு, பத்திரிகையுடன் காலையில் வா, சொல்கிறேன்'' என்றாள்.

''நான் அவளைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன், மேடம் —''

''நீ மட்டும்தானா?'' என்று தாரிணி விஷமமாகச் சிரித்தாள். ''உன்னைப் போலவே இன்னொரு ஆத்மாவும் அவளைப் போய்ப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறது — தெரியுமா, உனக்கு?''

''யார் அது?''

''அவளைக் கடத்திக் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிற அதே ஆள்தான். இதோ, இந்தக் கூட்டத்தில் தான் அவனும் இருக்கிறான். உனக்குச் சாமர்த்தியமிருந்தால் அவனைக் கண்டு பிடித்துக் கொள்'' என்று குரோதமாகச் சொல்லி விட்டு ''ஹாய்'' என்று யாரையோ வரவேற்கப் போய்விட்டாள் தாரிணி தேவி.

ரமேஷ் திகைத்துப் போய் நின்றான். விமலா உயிரோடு இருக்கிறாள் என்ற செய்தி வயிற்றில் பாலை வார்த்தது. ஆனால் அவளை ஒளித்து வைத்திருக்கும் ஆளும் 'இங்கேயே இருக்கிறான்' என்றாளே — யாராக இருக்கும்?

விமலா முன்பொரு சமயம் சொன்ன ஒரு விஷயம் அவனுக்குச் சட்டென்று நினைவு வந்தது. ஒருநாள் மாலை வேலை முடிந்து வந்ததும் டிரஸ் மாற்றிக் கொண்டே அவள், ''நான் நாளையிலிருந்து மதுரபவனத்துக்குப் போகப் போவதில்லை, ஆமாம் —'' என்றாள்.

''ஏன்? என்ன ஆச்சு?'' என்று வியப்புடன் கேட்டான் ரமேஷ்.

''அங்கே இருக்கே ஒரு கோட்டான், அது என்னை முறைச்சு முறைச்சுப் பார்க்கிறது; யாருமில்லாத போது கிட்ட வந்து பல்லைப் பல்லைக் காட்டுகிறது. சகிக்கவில்லை.''

''அது யார் அந்தக் கோட்டான்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் ரமேஷ்.

''எல்லாம், மானேஜர் என்று பெரிசாகப் பேர் வைத்துக் கொண்டிருக்கே அந்த ஜெயராம்தான் —'' என்றாள் விமலா.

''ஐயய்ய ... அதற்குக் கோணக்கண் அல்லவா? அது கிழக்கே பார்த்தால் மேற்கே

பாதிரின்னு தெரியும். 'அதைக் கண்டா பயந்து விட்டாய். நீ கொஞ்சம் கூட ஒரு வி. ஐ. டி. இன்ஸ்பெக்டருக்கு 'ஒப்பா'க இருக்க லாயக்கே இல்லை போ — '' என்று சீத்தான் ரமேஷ்.

— அந்த ஜெயராமாக இருக்குமோ? அவன் தான் விமலாவைக் 'கிட்நாப்' பண்ணிக் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறானோ? ஜெயராம் பக்கம் திரும்பினான் ரமேஷ்.

மேஜையில் வெள்ளை விரிப்புகளை விரித்து, பண்டங்களையும், பழங்களையும், பூக்களையும், கரண்டி — முட்களையும் கொண்டு வந்து நிரப்பும் சிப்பந்திகளை விரட்டிக்கொண்டு இங்கும் அங்கும் பம்பரமாக ஓடிக் கொண் டிருந்தார் அவர்.

குட்டையான உருவம்; பளபளக்கும் முன் வழுக்கை; கனத்த மூக்குக் கண்ணாடிக்குள், ஏதோ இரகசியத்தை உள்ளடக்கி வைத்துக் கொண்டிருப்பது போன்று மிரண்டு நகரும் விழிகள் — இவர் செய்திருப்பாரா?

''ஹலோ — '' என்று உற்சாகமான குரல்கேட்டது. திரும்பினான். டாக்டர் தம்பதிகள்.

''ஹலோ, டாக்டர் ... ஹலோ, மேடம்.''

''எப்படி இருக்கிறது பத்திரிகை சமாசாரங்கள் எல்லாம்?'' என்று கேட்டார் டாக்டர்.

''நிறைய விஷயங்கள் தேவைப்படுகின்றன டாக்டர். இந்த மானேஜர் 'என்னைப் பற்றி இரண்டு வரி எழுத மாட்டேன்' என்கிறாயே என்று நச்சரிக்கிறார். இரண்டு வார்த்தைகள் சொல்லுங்களேன் — ''

''ஜெயராமா? நல்ல உழைப்பாளி. வெட்டிக் கொண்டு வா என்றால் கட்டிக்கொண்டே



வந்து விடக் கூடிய அசகாய சூரன் — '' என்றார் டாக்டர்.

''அதுமட்டுமில்லை, ரமேஷ். ரொம்பச் சத்தியசந்தர். பெண்டாட்டி செத்து இருபது வருஷங்களாகி விட்டன. ஆனாலும் இன்னும் அவள் நினைவாகவே வாழ்கிறார். இப்படி ஓர் ஆளைப் பார்க்க முடியுமா இந்தக் காலத்தில்—'' என்றாள் மிஸஸ் பணிக்கர்.

ரமேஷின் மூளை குழம்பியது. அப்படியானால் தாரிணி குறிப்பிட்டது யாரை?

''ஹாய் மகாராணி வந்து விட்டாள்!'' என்று பல குரல்கள் ஒலித்தன. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். பெரிய கெடிலாக் கார் ஒன்று வந்து நின்றிருந்தது. கதவைத் திறந்து கொண்டு, எளிமையே வடிவாக, ஒல்லியாக, உயரமாக ஒரு பெண்மணி இறங்கி எல்லோரையும் பார்த்துக் கைகூப்பிப் புன்னகை செய்தாள்.

ஹாலின் கோடியில் முன்னாள் நீதிபதியுடன் பேசிக் கொண்டிருந்த தாரிணி தேவியும் திரும்பிப் பார்த்தாள். விநாடிப் பொழுதில் எல்லாருமே தம்மை மறந்து விட்டது அவளுக்கு எரிச்சலை மூட்டியது.

''மேடம்! என்ன நின்று விட்டீர்கள்? பிரதான விருந்தாளி வந்து கொண்டிருக்கிறார். எதிர்கொண்டு போய் வரவேற்க வேண்டாமா? வாருங்கள் போகலாம்'' என்றார் நீதிபதி.

''எல்லாம் போகலாம். எதிர் கொண்டு என்ன—எதிர் கொண்டு. அவள் பெரிய மகாராணியாக இருந்தால் அது அவளோடு இருக்கட்டும். எனக்கொன்றுமில்லை!''என்று சொல்லிவிட்டு, அவள் வந்ததைக் கவனியாதவள் போல் சட்டென்று திரும்பி, எதையோ தேடுவதைப் போலப் பாசாங்கு செய்ய ஆரம்பித்தாள் தாரிணி .

அடுத்த இரண்டாவது நிமிஷமே அவள் அருகில் மகாராணியின் குரல் கேட்டது... ''ஹலோ திருமதி தாரிணி தேவி கன்யாஸ்ரீ ராக்மாத்தாஜி — ''

இந்த அடைமொழிக்காகத் தானே இந்தப் பெருங்காயச் சொப்பு வாழ்நாள் முழுதும் ஏங்கிக் கொண்டிருக்கிறது? கோபம் கூடக் குறைந்து விட்டது. கம்பீரமான புன்னகையுடன் அவள் திரும்பினாள். ''ஓ — மகாராணி! வந்து விட்டாயா? ஏன் இத்தனை நாழி?'' என்று கையை நீட்டினாள்.

மிகுந்த நட்புரிமையுடன் அதைப் பற்றி உதட்டில் பதித்துக் கொண்டாள் மகாராணி. ''மன்னியுங்கள். சற்றுத்தாமதமாகி விட்டது. இரண்டு விசேஷ விருந்தாளிகள் என்னுடன் வந்திருக்கிறார்கள். மாமல்லபுரம் பார்க்கத் துடித்தார்கள். அழைத்துப் போயிருந்தேன். இதோ இவர்கள்தான். மீட் மிஸ்டர் ராகுல் அண்ட் ஜெகிந்தர்...''

''வேண்டாம். கூப்பிடாதே அவர்களை... நான் அத்தனைக்கு இன்னும் தாழ்ந்து விடவில்லை. ரேவா சமஸ்தானத்துக் கற்பரசிகள் கண்ட கண்ட பயல்களிடமெல்லாம் பேசுவது கிடையாது?'' வெடுக்கென்று சொல்லி விட்டு முதல் ரவுண்டிலேயே ஜெயித்து விட்ட பெருமையுடன் முன்னால் நடந்தாள் தாரிணி தேவி.

பாரிபூர் மகாராணியின் முகம் அரை விநாடி கருங்கியது. காட்டிக் கொள்ளாமல் புன்னகையுடன் தாரிணிதேவியைத் தொடர்ந்து விருந்து மண்டபத்துக்குள் போனாள்.

மிஸ்டர் கோவிந்து டையைச் சரி செய்து கொண்டே நிமிர்ந்து பார்த்தான். நீண்ட பெரிய மேஜையின் எதிர்வரிசை முழுவதையும் பாரிபூர் கோஷ்டி அடைத்துக் கொண்டிருந்தது. பட்டாடைகளும், வைரங்களும், ஸாடினும் ஜாஜ்வல்யமாக ஒளிர்ந்தன.

கோவிந்துவுக்கு நேர் எதிரே பாரிபூர் ராஜ தம்பதிகள் உட்கார்ந்திருந்தார்கள். ராணிக்கு வலப்புறம் உட்கார்ந்திருந்த இளைஞர்களை உற்றுப் பார்த்தார் கோவிந்து ... வட்ட முகமும், ஹிட்லர் மீசையுமாக இருக்கிறவனை எங்கோ பார்த்திருக்கிற மாதிரி இருந்தது ... அவனும், கோட்டுப் பித்தான் துவாரத்தில் அவன் செருகி வைத்திருக்கிற காகித ரோஜாவும் ... யார் இவன்? எங்கே பார்த்திருக்கிறோம் இவனை...?

காதடியில், பக்கத்தில் உட்கார்ந்திருக்கிற தாரிணியின் கோபம் கலந்த கிசுகிசுப்பு கேட்டது: ''அந்த ஓடுகாலியைச் சும்மாச் சும்மா என்ன பார்வை?''

திடுக்கிட்டுத் திரும்பினார்: ''நான் அவளை எங்கே பார்த்தேன்—?''

''சும்மா மறைக்காதீர்கள் .... உங்களைத் தெரியாதா எனக்கு ... ஒரு மரப்பாச்சிக்குப் பாவாடை தாவணி கட்டி நிறுத்தியிருந்தாலே நூறு தடவை அதைச் சுற்றிச் சுற்றி வருவீர்களே — ''

''டோண்ட் பீ ஸில்லி தாரிணி'' என்றார் கோவிந்து கடுமையாக.

''விமலாவை எங்கே ஒளித்து வைத்திருக்கிறீர்கள்?'' என்று மடக்கினாள் தாரிணி.

''என்னது? நானா? விமலாவை ஒளித்து வைத்திருக்கிறேனா? வாட் நான்சென்ஸ்.''

''நான்சென்ஸா? விடியட்டும். எது நான்சென்ஸ் என்பதைக் காட்டுகிறேன். உலகத்தில் ஒழுக்கம் என்பதே போய்விட்டது. இந்தத் தடிச்சியானால் இந்தத் தடியர்களுடன் பகிரங்கமாக ஊர் சுற்றிக் கொண்டிருக்கிறாள். நீங்கள் என்னவென்றால் ...''

''போதும். புலம்பலை நிறுத்து. எல்லாரும் நம்மையே கவனிக்கிறார்கள்... எழுந்து உன் வரவேற்புரையை நிகழ்த்து.''

தாரிணி தேவி கணவன் மீதிருந்த கோபம், அதிருப்தியுடனே பேச எழுந்தாள். ''மதிப்புக்குரிய விருந்தாளிகளே! புகழ் பெற்ற ரேவா சமஸ்தானத்தின் சார்பில்.,..''

கோவிந்து முணுமுணுத்துக் கொண்டார்: ''எங்கே இருக்கிறது அது. ... அதுதான் உன் முப்பாட்டன் காலத்திலேயே கைமாறிப் போய் விட்டதே ... நாலாயிரம் மைல் தள்ளி வந்து வாடகைக் குச்சில் அல்லவா குடியிருக்கிறோம்.''

''அக்கா இன்று ரொம்ப உணர்ச்சி வசப்பட்டிருக்கிறாள். எனக்குப் பயமாக இருக்கிறது!'' என்று தன் கணவரின் காதடியில் கிசுகிசுத்தாள் மிஸஸ் பணிக்கர். (தொடரும்)

---

'ஆஷ்ட்ரே'யின் உள் பக்கம் சாம்பல் ஒட்டிக் கொள்ளாமல் இருக்க, ஒரு மெழுகுவர்த்தியை எடுத்துக் கொண்டு 'ட்ரே'யின் உள் பக்கம் தேய்த்துவிட வேண்டும் !

-சரோஜா ராமச்சந்திரன்



ஆண்டவனது அருளை ஒரு குரு மூலம்தான் பெற முடியும் என்று உறுதியாக நம்புகிறவன் நான். குருவருளின்றித் திருவருள் இல்லை என்றும், தெய்வ ஞானம் சித்திக்காதென்றும் ஆசானும் ஈசனும் ஒன்றென்றும், குரு பார்வையில் கோடி பாவம் தீரும் என்றும், குருவின் பெருமையை நம் பண்டைய நூல்கள் கூறுகின்றன. அவர் தம்மை உணர்ந்த பெரியவராயும், இறைவனுடைய பேரன்பை, பேரருளை, பேரழகை எங்கும் எப்போதும் அனுபவித்துக் கொண்டே இருக்கும் பேறு பெற்றவராயும் இருக்க வேண்டும். அன்றாட வாழ்க்கையில் மக்களுக்கு ஏற்படும் ஐயப்பாடுகளைத் தெளிவுபடுத்திப் பரிகாரங்கள் கூறி யாவரும் ஓரினம் என்பதை முதலில் தாம் உணர்ந்து, இதை எல்லோருக்கும் உணர்த்தி ஒருவனே தெய்வம் என்பதை அறிந்து அதைப் பிறருக்கு அறிவுறுத்திச் சொல்லாலும் செயலாலும் கண்கண்ட தெய்வமாக விளங்க வேண்டும். மேலும் அந்தக் குருவானவர் செயல் தூய்மைக்கும், சொல் தூய்மைக்கும் உறைவிடமாயிருக்க வேண்டும். இந்த வகையில் பன்றிமலை சுவாமிகள் எனது குருவாகவும், நான் போற்றி வணங்குகிற மனித தெய்வமாகவும் விளங்குகிறார்.

அவர் தெய்விகப் பிறவிதான் என்பதை அவரது திருக் கரத்திலும், திருப்புறத்திலும் திருவடியிலும் அமைந்திருக்கும் தெய்விகச் சின்னங்களான சங்கு, சக்கரம், அறுகோணம் சேவற்கொடி, திரிசூலம், ஜண்டா, சக்தி வேல், வஜ்ரவேல், வெற்றி வேலுக்குள் அருள் வேல், நெற்றியில் இரு புருவங்களுக்கும் மத்தியில் அமைந்திருக்கும் மூன்றாவது கண் முதலியன உறுதிப்படுத்துகின்றன.

''உள்ளத் தூய்மையே ஆத்ம பலம்; மற்றப்படி வெளி வேடங்களால் என்ன பலன் என்று கூறி, வேஷ்டியும் ஜிப்பாவுமாக மற்றத் துறவிகளிடமிருந்து சற்று வேறுபட்டுக் காட்சியளிக்கிறார். இப்படிக் காஷாயத்தை ஒதுக்கிய சுவாமிகள் தம் ஆத்ம பசியின் ஆரம்ப காலத்தில் காஷாயம் அணிந்திருக்கிறார் என்ற செய்தி நம்மை வியப்புக்குள்ளாக்கும் ஒன்று.

பன்றிமலை சுவாமிகள் ஆடியருள்கின்ற சித்துக்கள்தான் மக்களைப் பிரத்தியட்சமாகக் கடவுள் நம்பிக்கை உள்ளவர்களாக்குகிறது. அதனாலன்றோ அவரைச் சோதிக்க வந்த பலர் மனம் மாறிக் கடவுள் நம்பிக்கையுள்ளவர்களாகி, இன்று அவருடைய சீடர்களாகவும், பக்தர்களாகவும் திகழ்கிறார்கள்! ''விஞ்ஞானத்துக்கு அப்பாற்பட்ட தெய்விகத்தைப் பரிசீலனை செய்வதென்றால் நமது அறிவே எட்டாது. ஆயுளே போதாது. இந்தத் தெய்விகத்தை அடைந்து விட்டால் எவ்வளவோ செயற்கரிய செயல்கள் செய்யலாம்'' என்று சுவாமிகள் கூறுகிறார்கள். எல்லோராலும் இது முடியுமா? முடியாத காரணத்தாலன்றோ சித்துக்களைப் பற்றிச் சிலர் பழித்துப் பேசி வருகிறார்கள்? ''தெய்வ சக்தியை நிலை நாட்டும்போது நடக்காதன நடக்கின்றன. இவ்வாறு நடப்பது இயற்கைக்கு விரோதம் என்று கருத வேண்டாம்'' என்று விளக்கமாக சுவாமிகள் கூறுகிறார்கள். அட்டமா சித்திகள் கைவரப்பெற்று உலகம் வியக்கும் செயல்களைச் செய்து வரும் சுவாமிகள் அடக்கமாக, ''நான் கடவுள் அல்ல, கடவுளுக்கு ஒப்பானவனும் அல்ல, நானும் உங்களைப் போல் ஒரு மனிதன், முருக பக்தன், தெய்வத்தின் அருளை மக்கள் நன்மைக்காகச் சம்பாதிக்க அரும்பாடு படுபவன்'' என்றும், ''ஏதோ அற்புதம் செய்து உங்களை யெல்லாம் திகைக்க வைக்க வேண்டும் என்பது என் எண்ணமல்ல; எல்லாம் அவன் செயல்'' என்றும் கூறி இறை வழிபாட்டை வளர்த்து வருகிறார்.

ஐந்தெழுத்துண்மையை அறிந்த நமசிவாய சித்தராயும், பக்தர்கள் அநேகரின் கண்கண்ட தெய்வமாகவும் விளங்கும் ஸ்ரீலஸ்ரீ பன்றிமலை சுவாமிகளைக் கண்டு தரிசிக்க, தொட்டு வணங்கக் காணிக்கை ஏதும் இடையாது. அன்பு ஒன்றையே காணிக்கையாகப் பெறுகிறார்.

**— ஆர். விஜயராகவன்**

## அற்புதமும் அவன் செயலே!

நான் வணங்கும் மனித தெய்வம்-5.



# நாள் தோறும் கண்கவர் புதிய தோற்றம்
# மக்கள் போற்றும் உயர்தர மாற்றம்





வாரத்திற்கு வாரம் புத்தம் புதிய டிசைன், புதிய பாணி, கலைத்திறன் கொண்ட துணிமணிகள். வழங்குவதோ பாம்பே டையிங். செயற்கையிழை ஷர்ட்டிங்குகளின் ஒப்பற்ற உயர் தரம் 50/50, 67/33, 80/20 மற்றும் நூற்றுக்கு நூறு பாலியெஸ்டர் பிரிண்டுகள், பாலியெஸ்டர் டெனிம்கள் மற்றும் டெக்ஸ்சரைஸ்ட் ஸூட்டிங்குகள்.

**கபித்தான்** பாலியெஸ்டர் ஷர்ட்டிங்குகள்

**வாட்ரீன்** பாலியெஸ்டர் ஸூட்டிங்குகள்

## ஆயிரமாயிரம் வகைகள்—
## அன்றாடம் புதுப்புது டிஸைன்கள்!

# பாம்பே டையிங்

BDM-27A tam

# காதல் என்றால்....



★ நூலகத்தில் எனக்கு வேண்டிய ஒரு புத்தகத்தைத் தேடித் தேடிச் சலித்துவிட்டேன். ஏமாற்றத்துடன் திரும்புகையில், ஒருவர் நான் தேடிய அதே புத்தகத்தைத் திருப்பித் தருவதற்காக வந்து கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். நூலகப் பணியாள் அதைப் பெற்று, அதனிடத்தில் வைக்கும் வரை காத்திருந்த நான், உடனே சென்று அப்புத்தகத்தை எடுத்தேன். புத்தகத்திலிருந்து குப்பென்று சிகரெட் வாசனை வீசியது. பழக்கமில்லாத அந்த வாசனை, என் நாசியில் புகுந்து வயிற்றைப் புரட்டியது. கோபம் பொங்கியெழ, நேராக லைப்ரேரியனிடம் சென்று முறையிட்டேன். என்னுடைய சீற்றத்தையும் சாடலையும் கண்ட லைப்ரேரியன் என்ன சொல்வது என்று அறியாமல் திகைத்து நின்று விட்டார். சுற்றியிருந்தவர்கள் வேடிக்கை பார்த்தனர். ஒரு மூலையில் அமர்ந்து, புத்தகம் ஒன்றைப் புரட்டிக்கொண்டிருந்த அவர் (எனது சீற்றத்துக்குக் காரணமானவர்) அமைதியாக எங்களருகே வந்து, என்னிடமும் லைப்ரேரியனிடமும் மன்னிப்புக் கோரினார். படித்துக் கொண்டிருக்கையில் சிகரெட் புகைத்தது தம் தவறே என்றும், மீண்டும் அவ்வாறு நேராமல் பார்த்துக் கொள்வதாகவும் கூறினார். என்னுடைய கோபமும், ஆத்திரமும் எங்கோ போய் மறைந்துவிட, வெட்கமும், அவமானமும் என்னை வந்து பற்றிக் கொண்டன. அவரோ, ஒன்றுமே நடக்காதது போலத் தம் இருக்கைக்குத் திரும்பிச் சென்று படிக்க ஆரம்பித்துவிட்டார்.

நான் குற்ற உணர்ச்சியுடன், அந்தப் புத்தகத்தைப் பதிவு செய்து பெற்றுக் கொண்டு, லைப்ரரியை விட்டுக் கிளம்பி வீட்டை நோக்கிச் செல்ல ஆரம்பித்தேன். நடந்து கொண்டிருக்கையில் அந்தப் புத்தகத்தை ஒரு தடவை முகர்ந்தேன். ஏனோ முன்பு, வயிற்றைப் புரட்டிய அதே சிகரெட் வாசனை இப்போது சுகந்தமாய் இருப்பதாகத் தோன்றியது. அவர் முகமோ, என் கண்களைவிட்டு அகலாமல் நின்றது. அதே யோசனையுடன் அந்தப் புத்தகத்தை அடிக்கடி முகர்ந்து கொண்டே நடந்து கொண்டிருந்த என்னை, ''உங்களுக்குச் சிகரெட் வாசனை பிடிக்காது என்றல்லவா நினைத்தேன்?'' என்ற குரல் திடுக்கிட்டுத் திரும்ப வைத்தது. லைப்ரரியில் என் சீற்றத்துக்குப் பாத்திரமான அதே சிகரெட் நண்பர், ஸ்கூட்டரில் அமர்ந்து என்னை நோக்கிப் புன்னகை புரிந்து கொண்டிருந்தார். நான் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, ''ஆமாம், இதுவரை பிடிக்காதுதான். ஆனால் ஏனோ இப்போது சிகரெட் வாசனை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது'' என்றேன். அவர் குறும்பும் வியப்பும் மேலிட, என்னைப் பார்த்தார், பிறகென்ன? அடிக்கடி அதே நூலகத்தில் சந்தித்துக் கொண்டோம். இருவரும் அவரவரது ரசனைகளையும் புத்தகங்களையும், பின்பு மெதுவாக, அன்பையும் பரிமாறிக் கொண்டோம்.

தற்செயலாக நாங்கள் இருவரும் ஒரே மதத்தையும், ஜாதியையும் சேர்ந்தவர்களாக இருந்ததால் ஜாதி விஷயமாக இருதரப்புப் பெற்றோரிடமிருந்தும் எதிர்ப்புக் கிளம்ப வாய்ப்பில்லை. எனினும், காதல் திருமணம் என்ற ஒரே காரணத்துக்காகச் சற்றுத் தயங்கிய என் பெற்றோர்களையும், எங்களது உறுதியால் சமாதானப்படுத்தி விட்டோம். எல்லார் ஆசியுடனும் திருமணம் புரிந்து கொண்டோம். இன்று வரை மகிழ்ச்சியாகவே இருந்து வருகிறோம். விட்டுக் கொடுக்கும் தன்மையும் பரந்த மனப்பான்மையும் இருக்கும் வரை, திருமண வாழ்வில் பூசலுக்கே இடமில்லை என்பதைக் கண்கூடாகக் காண்கின்ற லட்சியத் தம்பதிகளாய் வாழ்கிறோம்.

- ஜெயலக்ஷ்மி ராமஸ்வாமி



★ அண்ணியின் தங்கையான அலோவுக்கும் எனக்கும் இடையே பார்வையில் வளர்ந்த காதல் விரைவிலேயே வேரூன்றி ஆலாகப் படர, அதன் நிழலிலிருந்தும் நீங்க எங்கள் இருவராலும் இயலவில்லை. விழிகள் நவின்ற ஆயிரம் மொழிகள் நெஞ்சங்களில் அப்படியே தேங்கின. அலோவுக்கு ஒரு

குறை. பேசும்போது திக்கித் திக்கித்தான் பேசுவாள். உணர்ச்சிவசப்பட்டுவிட்டால் குரலே எழாது திணறிப் போவாள். அவள் இதயத்தில் ஒன்றிய என் உணர்வுகளுக்கு அது ஒரு குறையாகவே படவில்லை. நான் என் எண்ணத்தை வெளியிட்டதும் வீட்டில் பெரும் எதிர்ப்பு கிளம்பியது. என் கண்களுக்குத் தெரியாத அவளது குறை பிறர் கண்களுக்கு நன்கு தெரிந்ததுதான் காரணம். காதல் அலைகளின் முன்னால் எதிர்ப்புகள் பயனற்றுப் போயின.

அண்ணியின் முயற்சியால் அகிலாவையே என் துணைவியாக ஆக்கிக் கொண்டேன். நாவில் குறையை அவளுக்கு வைத்த இறைவன் இதயம் என்பதை முழுமையாகத் தந்திருந்தான். அவள் திணறித் திணறிப் பேசியபோதெல்லாம் அது ஒரு குழந்தையின் மழலையாகவே என் காதில் ஒலித்தது. அகிலா என்னோடு வாழ்ந்ததெல்லாம் எட்டே மாதங்கள்தான். என்னுயிரைத் தன் உடலில் சுமந்து தாய் வீடு சென்றவள் மீண்டு என்னிடம் வரவேயில்லை. அகிலா என்னைப் பிரிந்து சென்று நான்கு வருடங்களுக்கு மேலாகிவிட்டது. எனினும் இன்றும் அவள் இவ்வுலகில் இல்லை என்று என்னால் நினைத்துப் பார்க்க முடிவதேயில்லை. எங்கோ எனக்காக அவள் காத்திருப்பது போன்ற பிரமையே ஏற்படுகிறது. நெஞ்சில் உறையும் அவள் வடிவுக்கு அழிவுதான் ஏது ?

- வீர. வசந்தன்



★ சிறு வயதிலிருந்தே எனக்கு மிகுந்த தாழ்வு மனப்பான்மை உண்டு. நான் குரூபி அல்ல என்றாலும், அழகியும் அல்ல. எனக்குள்ள தாழ்வு மனப்பான்மையால், என்னை அழகுபடுத்திக் கொள்ளும் முயற்சிகளில் இளம் வயதில் ஈடுபட்டதே இல்லை. அழகை அதிகமாக வைக்காத ஆண்டவன், அறிவு விஷயத்தில் அந்தக் குறையை ஈடு செய்துவிட்டான். படிப்பு, பாட்டு, பேச்சுப் போட்டி இவைகளில் பள்ளி, கல்லூரியில் முதலிடம் எப்போதும் எனக்குத்தான். நான் படித்தது ஆணும் பெண்ணும் சேர்ந்து படிக்கும் கல்லூரியில்.

எங்கள் கல்லூரியின் ஹீரோவாக இருந்தவர் ராஜசேகர். எம். எஸ்ஸி. படித்துக் கொண்டிருந்த அவர், நல்ல அறிவாளி. கம்பீரமான தோற்றமும் பண்பும் பொருந்தியவர். காந்தத்தில் ஒட்டும் இரும்புத் தூள்கள் போல, எப்போதும் அவரைச் சுற்றிப் பெண்கள் கூட்டம் இருக்கும். அத்தனை பேரின் கண் கணைகளினின்றும் தப்பும் அவர் மீது எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அவரை விரும்பும் தகுதி எனக்கு இல்லாததால், நான் அவரைப் பற்றி நினைத்ததில்லை. ஒரு நாள் என்னைச் சந்தித்த அவர், என் அடக்கம், அறிவு, பண்பு இவை அவரை மிகவும் கவர்ந்துவிட்டதாகவும், அழகு நிலையானதல்ல. ஆனால் உண்மையான அன்பு நிலைத்திருப்பது என்றும் கூறி, என்னை அவர் உளமாற நேசிப்பதாகச் சொன்னார். என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை. அவரை ஏறிட்டு நோக்கிய என் கண்களில் அவர் அழகு தென்படவில்லை. அன்பு கனியும் அவர் உள்ளம் தான் தெரிந்தது. பெற்றோரின் சம்மதத்தோடு அவரை மணந்து கொண்டேன். பாலும், தேனும் போல் இணைந்து இல்லறம் நடத்தும் எங்கள் வாழ்வு காதலின் வெற்றிக்குச் சான்றாக இருக்கிறது.

- ஆர். நிர்மலா




★ ருக்மிணி எனக்கு உறவுக்காரப் பெண்தான். சிறு வயது முதலே நெருங்கிப் பழகியவர்கள்தான். ஒருவரை ஒருவர் விரும்பவும் செய்தோம். இவ்வளவுக்குப் பிறகு அவள் தகப்பனார் எங்கள் ஜாதகத்தை ஒப்பிட்டுப் பார்த்ததில் கொஞ்சம்கூடப் பொருத்தமில்லை என்ற பேரிடியை எனக்குத் தெரியப்படுத்திவிட்டார். அவர் ஒரு ஜாதகப் பைத்தியம். ஆகையால் இந்தத் திருமணம் நடைபெறுவதற்கில்லை என்று கூறிவிட்டார். எங்கள் இருவருக்கும் இதனால் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டாலும் எங்களது மன உறுதியை இழக்கவில்லை. எனது பெற்றோர்கள் எனக்கு வேறு இடத்தில் திருமணம் நிச்சயித்துவிட்டார்கள். ஆனால் நான் கண்டிப்பாக மறுத்துவிட்டேன். இந்தச் சமயத்தில் ருக்மிணியின் சகோதரன் எங்கள் இருவரது நிலையைப் புரிந்து கொண்டு எங்களுக்காகத் தன் தகப்பனாரிடம் வாதாடி அவர் மனத்தை மாற்றினான். பிறகு அவர் திருநின்றவூர் ஸ்ரீராமர் கோயிலில் புஷ்பம் போட்டுப் பார்த்துவிட்டுத் தெய்விக சம்மதம் எங்கள் பக்கம் இருக்கவே எங்கள் திருமணத்தைப் பூரண திருப்தியோடு முடித்து வைத்தார். ஆகையால் இதை நான் தெய்விகக் காதலாகவே மதிக்கிறேன். எங்கள் வாழ்க்கையில் எவ்வளவோ சோதனைகள் ஏற்பட்டிருக்கின்றன. இருப்பினும் எங்களது மன ஒற்றுமையால் அவைகளையெல்லாம் வென்று கொண்டு இலட்சியத் தம்பதிகளாக இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

- த. ச. கோவிந்தன்



# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 58. அலை வரிசைகள்

அலைகளே அகத்தின் ஆசை
அலைகளே ஒலியும் ஒளியும்
அலைகளே ஆடல் பாடல்
அலைகளே கலைகள் எல்லாம்

அகில இந்திய ரேடியோவின் சென்னை நிலையத்தை, சென்னை மாகாணப் பிரதம மந்திரி ராஜாஜி, 1938 ஜூன் 16ம் தேதியன்று தொடங்கி வைத்தார். அச்சமயம் அவர் பேசிய உரையைக் கல்கி, தாம் சில நாட்களுக்கு முன்னால் வாங்கியிருந்த மார்க்கோனி ரேடியோ கிராம் மூலம் வியப்புடனும் பெருமையுடனும் கேட்டார்.

இப்போது மிகச் சாதாரணமாயும், அலட்சியத்துக்குக் கூட உரியதாகவும் உள்ள ரேடியோ சாதனம், அக்காலத்தில் எப்படிக் கருதப்பட்டது என்பதை, சென்னை வானொலி நிலையத்தை முன் கூட்டி வரவேற்றுக் கல்கி எழுதிய கட்டுரை ஒன்றிலிருந்து அறிந்துகொள்ளலாம் :

சென்னை மாகாணத்துக்கு ஒரு புதிய கௌரவம் ஏற்படப் போகிறது. நமது தென்னாட்டு சங்கீதமானது உலகம் முழுவதும் பரவி எதிரொலி செய்வதைக் கேட்கப் போகிறோம். சென்னையில் நமது கர்நாடக சங்கீத வித்வான்கள் பாடும் சங்கீதத்தை பம்பாயிலும், கல்கத்தாவிலும், அதற்கப்பால் லண்டனிலும் பாரிஸிலும் பெர்லினிலும் உள்ள சங்கீத ரஸிகர்கள் இஷ்டம் போல் அனுபவிக்கக் கூடும்....

இந்த இருபதாம் நூற்றாண்டின் மகத்தான விஞ்ஞான அற்புதங்களுக்குள்ளே ரேடியோ அற்புதமும் ஒன்று என்று நேயர்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. லண்டனிலே ஒருவர் பாடுகிறதாம்; அதைச் சென்னையிலுள்ள நாம் கேட்கிறதாம். சென்னையிலே ஒருவர் பாட, அதை நியூயார்க்கில் உள்ளவர்கள் கேட்கிறார்களாம். முப்பது வருஷத்துக்கு முன்னால் கூட, இம்மாதிரியெல்லாம் நடக்கும் என்று யாராவது சொன்னால் எல்லாரும் சிரித்திருப்பார்கள். ஆனால் இன்றைய தினம் இது சாத்தியமாகி நம் கண் முன்னே நடந்து வருவதைக் காண்கிறோம்.

இத்தகைய ஆச்சரியமான சாதனத்தின் முழுப் பயன்களையும் பிற நாட்டாரைப் போல் நாமும் அடைய வேண்டும் என்பது தான் நம் எல்லாருடைய ஆசையுமாகும். ரேடியோ கருவிகள் விதேசி என்பதைக்கூட







○ சென்னை மாகாணப் பிரதம மந்திரி அகில இந்திய ரேடியோவின் சென்னை நிலையத்தைத் துவக்கி வைக்கிறார். ○ பி. கே. ராமானுஜம். ○ [illegible]

நாம் பொருட் படுத்துகிறோம் இல்லை. அறிவைப் பரப்புகிற சாதனங்களைப் பொறுத்த வரையில் நாம் சுதேசி விரதத்தைக் கூட கைவிடத் தயாராகிறோம். (ஆ. வி. 26-6-38)

சென்னை வானொலி நிலையம் இயங்கத் தொடங்கியதற்கு ஏழாம் நாள், கல்கியின் பேச்சு ஒன்று அதிலிருந்து ஒலிபரப்பாயிற்று. பேச்சு என்பதற்கு ஏற்ப அது நல்ல பேச்சு நடையில் அமைந்திருந்தது; ''சிறுகதை'' என்ற அதன் பொருளுக்கு ஏற்ப ஒரு குட்டிக் கதையுடனேயே ஆரம்பமாயிற்று. அந்தக் குட்டிக் கதை அல்லது குட்டைக் கதை, எப்படி ஒரு சிறுகதையானது குறுகத் தறித்ததாய் இருக்க வேண்டும் என்பதை எடுத்துக் காட்டிற்று:

ஒரு நாள், காஞ்சீபுரம் உபய வேதாந்த தாத்தையங்கார் ஸ்வாமிகள், அவருடைய வேலைக்காரன் குப்பனைக் கூப்பிட்டு, ''அடே, குப்பா, நீ உடனே ஸ்ரீபெரும்புதூர் இரு வேங்கடாச்சாரி ஸ்வாமி வீட்டுக்கு ஓடிப் போய், 'திருக்குடந்தை திரு நாராயண அய்யங்கார் ஸ்வாமி திருக்கோயில் ஆராதனைக்குப் போன போது, திருப்பாசி வழுக்கவே திருவடி தவறி விழுந்தார்' என்று சொல்லு'' என்பதாகத் திருவாய் மலர்ந்தருளினார்.

''ஆகட்டும் சாமி'' என்றான் குப்பன்.

தாத்தையங்கார் தமது வைஷ்ணவ பரிபாஷை அவனுக்குப் புரிந்ததோ என்னவோ என்று சந்தேகப்பட்டு, ''என்னடா சொல்வாய்?'' என்று கேட்டார். அதற்குக் குப்பன் ''தெரியாதா சாமி! கும்பகோணத்துப் பாப்பான் குட்டையிலே விழுந்தான்னு சொல்வேன்'' என்றான்.

நேயர்களே! ஒரு சம்பவத்தை அய்யங்கார் ஸ்வாமிகளுந்தான் சொன்னார்; குப்பனுந்தான் சொன்னான். ஆனால் குப்பன் சொன்ன முறை சிறுகதை லட்சணத்துக்குப் பொருத்தமானது: நீட்டாமல், வளர்த்தாமல்;



○ வேலூரில் மணிக்கு நடந்த சிகிச்சை வெற்றிகரமாக முடிந்தபின் கல்கி குடும்பம் டாக்டர் ஸ்கட்டருடன் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம். ○ இருமுறை கிருகப்பிரவேசம் நடந்த வீடு. ○ டி. எஸ். வேங்கடராம அய்யர். ○ சா. கணேசன். ○ ராமசாமி தம்பதி.













"ஆபீசுக்கு லேட்டாக வரக்கூடாது. சரியாகப் பத்து மணிக்கெல்லாம் ஆபீஸ் கேட்டைச் சாத்தி விடச் சொல்லுவேன்."

"பரவாயில்லை. எனக்குச் சுவரேறிக் குதிக்கத் தெரியும்."

"கும்பகோணத்துப் பாப்பான் குட்டையிலே விழுந்தான்" என்று நாலே வார்த்தைகளில் பளிச்சென்று விஷயத்தைச் சொன்னான் பாருங்கள்.

பழைய கதைதான்; ஆனாலும் அதைக் கொண்டே புதுமைச் சிறுகதையின் வடிவத்தையும் உத்தியையும் கல்கி எடுத்துச் சொன்னார். அந்த முதல் பேச்சை அடுத்து, "மனோரதப் பிரயாணம்" என்ற தலைப்பில், தொடர் பேச்சு ஒன்றை அவர் ஒலிபரப்பினார். அதன் பெயர்தான் அப்படியே தவிர, கற்பனை உலகில் அல்லாமல் செய்தி உலகில்தான் அவர் பிரயாணம் செய்தார். அவைதாம் முதன் முதலாகத் தமிழில் ஒலிபரப்பான செய்தி விமரிசனங்கள் எனலாம்.

தாமே விகடனின் ரேடியோ நிருபராகக் கல்கி இருந்து கொண்டு, சென்னை அலை வரிசைகளில் தாம் கேட்ட நிகழ்ச்சிகள் பற்றி மதிப்புரை எழுதினார். சென்னை நிலையம் "ஜிஞ்சாமிர்தமாய்" நடந்து வருகிறது என்றும் அதன் நிகழ்ச்சிகள் பஞ்சாமிர்தமாய் இருக்கின்றன என்றும் பாராட்டிச் சொன்னார்.

"வானொலி" பத்திரிகையின் ஆசிரியராய்த் "தீபன்" பதவி ஏற்ற காரணத்தால், அவருடைய தந்தையார் டி. கே. சி., திருநெல்வேலியிலிருந்து சென்னைக்கு அடிக்கடி வந்து தங்கலானார். அவர்கள் வசித்தது, தியாகராயநகர் சாம்பசிவன் தெருவில் மு. அருணாசலத்தின் "மணிமேகலை" என்ற வீட்டுக்குப் பக்கத்து இல்லம். அடுத்தடுத்த அந்த இரண்டு வீடுகளும், கல்கியைப் பொறுத்தவரை, ஒரே அலைவரிசையில் விரும்பும்போது எட்டக்கூடிய இரண்டு நிலையங்கள் போல் இருந்தன. தற்செயலாய் அமைந்த அந்த அணிமை காரணமாய், கல்கியின் இதயத்தில் தற்செயலாய் எழுந்த ஆசைச் சிற்றலை ஒன்று, இதயத்துக்கு இதயம் அஞ்சலாகி, கம்பனின் காவியப் புகழ் ஓங்கியும், பெருகியும் பரவுவதற்கு வகை உண்டாயிற்று.

ஒரு நாள் மாலை டி.கே.சி.யின் வீட்டுக்குக் கல்கி சென்ற சமயத்தில், "கம்பன் பிறந்த ஊர், காவேரி தங்கும் ஊர்" என்ற வெண்பாவைச் சில ரசிக நண்பர்களுக்கு அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

"நமது கவிகள் சம்பந்தமாய் அநேகமாய்த் தாறுமாறான தகவல்கள் தான். ஆனால், நல்ல வேளையாகக் கம்பர் பிறந்த ஊர் திருவழுந்தூர்தான் என்பதில் சந்தேகமே கிடையாது. இந்த வெண்பாவையும் திருவழுந்தூர்க்காரர் ஒருவர்தான் பாடி இருக்க வேண்டும். அதைப் பற்றி எனக்குச் சந்தேகம் இல்லை. தமிழ் நாட்டில் கம்பர் பிறந்தார் என்பது பற்றித் தமிழர்கள் எல்லாருமே பெருமை பேசிக் கொள்ளலாம் என்றால், தம் சொந்த ஊரில் பிறந்ததைப் பற்றித் திருவழுந்தூர்க்காரர் இவ்வளவு பெருமையோடு பாடினதிலே ஆச்சரியம் இல்லைதானே ? என்ன எக்களிப்பு பாருங்களேன் ! கம்பன் பிறந்த ஊர், காவேரி தங்கும் ஊர்...!"

"நல்ல வேளை !" என்று சொல்லிச் சிரித்தார் கல்கி. "நீங்களும் உங்கள் வட்டத் தொட்டிக்காரர்களும் திருநெல்வேலியில் கம்பர் விழா கொண்டாடுவதை நினைக்கும் பொழுதெல்லாம், எங்கே அவரை உங்கள் ஊர்க்காரர் என்றே உரிமை கொண்டாடுவீர்களோ என்று பயப்பட்டேன்."

"நீங்கள் உங்கள் ஊரில் கம்பருக்கு விழாக் கொண்டாடாவிட்டால் நாங்களா பழி ?" என்று கேட்டார் ரசிகமணி.

"மிஸ்டர் அருணாசலம் ! ஐயா சொன்னதைக் கேட்டீர்களா? நீங்களும் நானும் தஞ்சை ஜில்லாக்காரர்களாக இருந்து என்ன பிரயோஜனம்? கம்பர் பிறந்த ஊரிலேயே அவருக்குப் பெரிதாக விழா நடத்தியே ஆகவேண்டும். சீக்கிரமே நடத்த வேண்டும் !"

இப்படிக் கல்கி சொன்னாரே தவிர, தமக்குள்ள வேலைகளுக்கு இடையே எப்படி நடத்துவது என்று மலைக்கத்தான் செய்தார். திடீரென்று ஒருநாள் அதற்கு ஒரு வழி உண்டாயிற்று. திருவழுந்தூரை அடுத்த குற்றாலத்திலிருந்து, அருணாசலத்தின் நெருங்கிய உறவினரான பாலகிருஷ்ணன் என்ற இளைஞர் சென்னைக்கு வந்தார். அருணாசலத்தின் வீட்டில் அறிமுகமான அவரை உடும்புப் பிடியாகக் கல்கி பிடித்துக் கொண்டார்.

"நாங்கள் இங்கிருந்து ஆகவேண்டியதைக் கவனிக்கிறோம்; நீங்கள் அங்கே செய்ய வேண்டியதைச் செய்கிறீர்களா?" என்று கல்கி கேட்டார்.

பாலகிருஷ்ணனும் மகிழ்ச்சியுடன் இணங்கினார். அப்போது தேரழுந்தூரில் கோயில் தர்மகர்த்தாவாய் இருந்த மருத்தூர்ப் பண்ணையார் சுந்தசாமிப் பிள்ளை, அந்த இளைஞருக்கு மிகவும் வேண்டியவர். செல்வமும் செல்வாக்கும் கொண்டிருந்தவர். அந்த ஊரில் உள்ள கம்பர்மேடு என்ற இடடல், வேற்று மதத்தாரின் இடுகாடாய் ஆகவிருந்ததைப் போராடித் தடுத்தவர் அவர். அவ்வாறு கம்பரிடம் பக்தி கொண்டிருந்த மருத்தூர்ப் பண்ணையார் உற்சாகமாய் விழா நடத்த முன்வந்தார்.

1939 மார்ச் மாத மத்தியில், அந்த விழா, பெரிய ஆலயத் திருவிழாவுக்கு ஒப்பான சிறப்புடன், டி.கே.சி.யின் தலைமையில் நடைபெற்றது. விழாப் பந்தல் கம்பர் மேட்டுக்கு அருகிலேயே அலங்காரமாய் அமைந்திருந்தது. கோயில் யானை மீது, கவிச் சக்கரவர்த்தி ஓவிய வடிவில் வீற்றிருந்து மேள தாள முழக்கங்களுக்கும், ஆயிரம் ஆயிரம் மக்களின் வாழ்த்தொலிக்கும் இடையே பவனி வந்தார். அந்த ஓவியத்தைக் கல்கியும் அருணாசலமும், வி.வி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் மூலம், 'சர்மா' என்ற கலைஞரைக் கொண்டு வரையச் செய்திருந்தார்கள்.

கல்கியும் டி. கே. சி.யும் விடுத்த அழைப்பின் பேரில், ''கம்பதாசர்கள்'' பலர், தமிழ் நாட்டின் வெவ்வேறு ஊர்களிலிருந்தும் தேரழுந்தூர் விழாவுக்கு வந்திருந்தார்கள். அவர்களில், சென்னை, சிதம்பரம், தூத்துக்குடி, காரைக்குடி ஆகியவற்றிலிருந்து வந்தவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களிலும் காரைக்குடிப் பிரதிநிதிகள் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். அமரப் புகழுடன் கம்பர் சமாதிகொண்டுள்ள தலத்திலிருந்து வந்தவர்கள் என்பதால் மட்டும் அல்ல; அவர்களுடைய ஊரில் கம்பர் விழா நடத்த வேண்டும் எனக் கல்கியும் டி.கே.சி.யும் கேட்டுக் கொண்டதற்கு அவர்கள் இணங்கியதாலுந்தான்.

அடுத்த மாதம் முதல் வாரத்திலேயே காரைக்குடியில் முதலாவது கம்பர் விழா, டி.கே.சி.யின் தலைமையிலேயே நடைபெற்றது. அதை நடத்துவதற்கு முருகப்பாவும் நடராஜனும், தேச பக்தியும் தமிழ்ப் பற்றும் பொதுப் பணியில் ஆர்வமும் கொண்ட சா. கணேசனின் துணையை நாடியிருந்தார்கள். துணையாக வந்தவரே பெரும் பொறுப்பேற்று விழாவை நடத்தினார். பின்னர் அடுத்தடுத்த ஆண்டுகளில் சா. கணேசனே முன்னின்று, மேலும் மேலும் விரிவாகவும் சிறப்பாகவும்



'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' இப்பழமொழியைப் பின்பற்றி வளர்ந்து வரும் காலனிகள் பல ஊர்களிலும் கோயில் எழுப்பி மகிழ்கின்றன. ஈரோடுக்கருகில் உள்ள சேஷசாயி பேப்பர் - போர்டு நிறுவனத்தைச் சேர்ந்தவர்களின் வசதிக்காக எழுந்துள்ள காலனியும் ஒரு கோயில் அமைத்து ஸ்ரீ கணபதி ஸ்ரீ கல்யாண சுப்ரமணியர், ஆஞ்சநேயர் போன்ற கடவுளர்களைப் பிரதிஷ்டை செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. இப்பணி சிறக்க உதவ விரும்புவோர் ஸ்ரீ எஸ். ஜி. ரங்கன், தலைவர், சேஷசாயி பேப்பர் - போர்டு காலனி ஆலயக் குழு, ஈரோடு, 638007 என்ற முகவரியோடு தொடர்பு கொள்ளவும்.

---

கம்பன் விழாவை நடத்தலானார். அவ்வாறு நடத்திக் கம்பனுக்கு அருவமாய்ப் புகழாலயம் எழுப்பிக் கொண்டிருந்தவர், அதற்கு ஓர் உருவமே கொடுக்க ஆசை கொண்டு, எழில் மிகு மணி மண்டபம் ஒன்றை அமைத்துவிட்டார்.

கம்பர் பிறந்த ஊரிலும், சமாதி கொண்ட ஊரிலும் அவருக்கு நவீன காலத்தில் இலக்கிய விழாக்கள் நடக்கத் தொடங்கியதற்கு, கல்கியின் மனத்தில் எழுந்த ஆசை அலைகளே மூலகாரணம் என்பது, மு. அருணாசலம் சொல்லித்தான் தெரிய வந்தது. அந்த முதல் விழாக்கள் பற்றி 9—4—39 ஆனந்த விகடனில், ''கம்பன் பிறந்த தமிழ் நாடு'' என்ற தலைப்புடன் தாம் எழுதிய கட்டுரையில், ''சென்னையில் வசிக்கும் தஞ்சை ஜில்லா இளைஞர்கள் சிலர்தான் முதலில் முயற்சி தொடங்கினார்கள்'' என்று மட்டும்தான் பொதுவாகக் கல்கி குறிப்பிட்டார்.

காரைக்குடி விழாவுக்குக் கல்கி செல்லவில்லை. ஏனென்றால் அவருடைய ''தியாக பூமி'' கதையின் படப் பிடிப்பு அப்போது இறுதிக் கட்டத்தில் இருந்தது. அத்துடன் இன்னொன்றும் பூர்த்தி அடைந்துகொண்டிருந்தது. அது என்ன, என்பதை, காரைக்குடி விழா முடிந்து சென்னை திரும்பிய டி.கே.சி., திருநெல்வேலி இளைய நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதம் ஒன்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம் :

(19-4-39) கம்பர் விழா தேரழுந்தூரிலும் காரைக்குடி வட்டத்திலும் ரொம்பவும் திருப்திகரமாய் நடந்தது ...

கல்கி புதிதாக வீடு கட்டி முடித்திருக்கிறார்கள். கிரகப் பிரவேசம் பத்து நாளில் நடக்கும்.

வீட்டில் முக்கியமான ஹால் 22 அடி நீளமும் 13½ அடி அகலமும் உள்ளதாய் இருக்



**சிவனுக்கு ஆறு தலை?**

முருகனுக்கு ஆறு தலை;
சிவனுக்கும் ஆறு தலை;
நாம் வேண்டுவது ஆறுதலை;
முருகனுக்கு ஆறு தலை; சரி
நாம் வேண்டுவது ஆறுதலை. சரி
சிவனுக்கு எப்படி ஆறு தலை?
கங்கை ஆறு சிவன் தலையில் இருக்கிறதல்லவா?
அதனால் சிவனுக்கும் ஆறு தலை!

- திருமுருக கிருபானந்த வாரியார் சொல்லக் கேட்டவர் - எம். எஸ்.

---

கிறது. அதை அலங்கரிப்பதற்குத் தக்கபடியாக மூன்று மேலப்பாளையம் ஜமுக்காளம் செய்ய வேணும். ஒவ்வொன்றும் 13½ அடி நீளமும் 7½ அடி அகலமும் உள்ளதாய் இருந்தால் சரியாய்ப் போய்விடும். எனக்குச் செய்த மாதிரி, ஒரு சாண் பட்டையாகவும் சிவப்புக் கம்பி போட்டதாகவும் இருக்க வேணும். உடனேயே தாங்கள் ஆர்டர் கொடுத்து விடுங்கள். நாம் செய்கிற மரியாதையாய் இருப்பதால் நல்ல மாதிரி செய்யச் சொல்ல வேணும்.

ஜமுக்காளங்களுக்கு ரா. கி. என்று பேர் போடச் செய்தால் நன்றாய் இருக்கும்.....

கல்கியின் புதிய வீடு மாம்பலம் போக் ரோடில் அமைந்தது. சங்கீத வட்டாரப் பிரமுகரும், முத்துசுவாமி தீக்ஷிதரின் கிருதிகள் வெகுவாகப் பரவுவதற்கு வகை செய்தவருமான டி. எல். வேங்கடராமய்யர், கட்டட வேலைகளில் அனுபவம் உள்ள தமது இளைய சகோதரர் கிருஷ்ணசுவாமி அய்யரையும் நெருங்கிய உறவினரான வேங்கடராம சர்மாவையும் அந்த வீட்டைக் கட்டி முடிப்பதில் உதவி செய்யச் சொன்னார். அந்த இருவரின் பொறுப்பிலேயே எல்லாவற்றையும் கல்கி விட்டு விட்டு, தமது ''தியாகபூமி'' கதையின் படப் பிடிப்பைக் குறுக்கிடாக் கொள்கையுடன் வேடிக்கையாய்ப் பார்த்துக் கொண்டிருந்தது போலவே, தம் வீட்டின் கட்டட எடுப்பு சம்பந்தமாயும் நடந்து கொண்டார் எனலாம்.

எட்டு கிரௌண்டின் மத்தியில் பெரிதாய் எழுந்த அந்த போக் ரோட் வீடு, அந்தக் காலத்துப் பார்வையில் புது மாதிரி மாடி வீடு; அந்தக் காலத்து மதிப்பில் அதன் பெறுமானம் நாற்பதாயிரம் ரூபாய்.

அந்த வீட்டில் இரண்டு தரம் கிருகப் பிரவேசம் நடத்தினார் அதன் சொந்தக்காரர். முதலில் அது ''கல்கி கட்டிய புதிய வீடு'' என்பதாக மட்டும் இருந்தபோது, வைதிக முறைப்படி சிறிதாகக் கொண்டாடினார்; பின்னர் அது, 19 என்ற இலக்கத்துடன் முகவரி கொண்ட பிறகு, லௌகிக முறைப்படிப் பெரிதாகக் கொண்டாடினார். அந்த இரண்டு கொண்டாட்டங்களுக்கும் இடையேதான், நாம் ஏற்கனவே பார்த்த ''தியாகபூமி'' சொற்போர் நடந்தது. புதிய வீட்டில் புதிதாக வாங்கிப் போட்ட தேக்கு மேஜை கல்கியின் கணைகளுக்குத் தளமாக அமைந்தது.

அந்தப் படம் சம்பந்தமான பரபரப்பு காரணமாகவோ என்னமோ, கிட்டத்தட்ட அதே சமயத்தில் இயங்கத் தொடங்கிய திருச்சி வானொலி நிலையத்தை, ஒரு மாதம் கழித்துத்தான் கல்கி வரவேற்று எழுதினார். 25–6–39 விகடன் இதழில் வெளியான அந்த வரவேற்புக் கட்டுரையில் '' திருச்சி அசரீரி'' என அந்த நிலையத்தை அவர் வர்ணித்து, அது ''தமிழ் நிலையமாக நடந்து வருவதையும், தமிழுக்கும் தமிழ் கலைகளுக்கும் ஆதரவு அளிப்பதையும்'' பாராட்டிச் சொன்னார்.

அதே ஆண்டு அக்டோபர் மாதத்தில் தமிழில் செய்தி ஒலிபரப்பு ஆரம்பமாயிற்று. தொடக்கக் காலத்தில் அது தோற்றுவித்த வியப்பையும் ஆவலையும் சொல்லி முடியாது. அந்த ஒலிபரப்பில் முன்னோடிகளாய் இருந்தவர்களில் ஒருவர், கல்கிக்கு உதவி ஆசிரியராய் இருந்த வி. கிருஷ்ணசுவாமி. இன்னொருவர், முன்பு கல்கி பத்திரிகைத் தொழிலைத் தொடங்கிய அதே ''நவசக்தி''யில் பின்னர் உதவி ஆசிரியராய் இருந்து, திரு வி.க.வின் சான்றிதழுடன் வானொலியில் சேர்ந்த பி. கே. இராமாநுஜம். அவர்கள் இருவரும் யுத்தம் சம்பந்தமான ஆங்கிலச் சொற்களுக்குச் சரியான தமிழ்ச் சொற்களை ஆக்கிச் சொன்னதை, ''ரேடியோ எப்படி ?'' என்ற பத்தியில் கல்கி மெச்சி எழுதினார்.

அந்தச் சமயத்தில் கல்கியும், யுத்தம் சம்பந்தமான தமது தலையங்கங்களில், புதுப் புதுச் சொற்களை ஆக்கியும், பழஞ் சொற்களுக்குப் புதுப் பொருள்களைப் பொருத்தியும் வாசகர்களிடையே பரப்பிக் கொண்டிருந்தார். அத்துடன், தாம் எழுதி முடித்திருந்த ''பார்த்திபன் கனவு'' நாவலிலிருந்து, அதன் காலத்துக்குப் பொருந்தாச் சொற்களைக் களைந்து பொருந்தும் சொற்களை நடுவதிலும் ஈடுபட்டிருந்தார்.

அந்தக் களையெடுப்பு வேலையில், மு. அருணாசலத்தின் உதவியைக் கல்கி

# ஒப்பற்ற வெள்ளைவெளேர்-சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்...

## ஒப்பற்ற வெள்ளைவெளேர்!




அதி உன்னதமான துலக்கும் சக்தி படைத்தது
ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்கையும்
அகற்றிவிடுகிறது. பிறர் பொறாமைப்படும்
அளவுக்கு அதி உன்னதமான வெண்மை
அளிக்கிறது உங்கள் துணிகளுக்கு.
அதிசயமென்ன, இந்தியாவின் தலைசிறந்த ரகமாக
விளங்குகிறது ஸூப்பர் ஸர்ஃப்!

---

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

நாடினார். அப்போது அந்த நண்பர் கல்கியின் புது வீட்டைச் சுற்றித் தோட்டம் போடுவதில் யோசனை சொல்லியும் கைகொடுத்தும் உதவிக் கொண்டிருந்தார். இலக்கியத்தில் மட்டும் அல்லாமல் தோட்டக் கலையிலும் தேர்ச்சி கொண்டவர் அவர். (அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னால் அவர், ''காய்கறித் தோட்டம்'' என்ற நூலை வெளியிட்டிருந்தார். சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் எழுதிய ''இன்றையத் தமிழ் வசன நடை'' மிக்க பரபரப்பையும் பெரும் விவாதத்தையும் தோற்றுவித்தது. அதில் அவர் கல்கியை ''உயிர்த் தத்துவம் நிறைந்த துடிப்புடன்'' எழுதுகிறவர் என்று வர்ணித்து நல்ல தமிழ்ப் பயிர் வளர்க்கும் ஒரு சிலரின் வரிசையில் சிறப்பாகக் குறிப்பிட்டார். மற்றவர்களின் எழுத்துக் கலைக் ''கலைகள்'' என அவர் கருதி, அவற்றுக்கு ''தேர்வடத் தமிழ்'', — ''சூறாவளித் தமிழ்'', ''சிலம்பத் தமிழ்'' என்றெல்லாம் பெயர் கொடுத்துக் கேலி செய்தார்.)

''பார்த்திபன் கனவு'' நாவலில், சரித்திர நிகழ்ச்சிகள் சம்பந்தமாய்க் கால வழுக்கள் இல்லாமல் பார்த்துக் கொள்வதற்காக, ஏற்கனவே சிலரிடம் கல்கி ஆலோசனை நடத்தி இருந்தார் எனத் தெரிகிறது. அவர்களில் ஒருவர் எம். எஸ். ராமஸ்வாமி. தொழிலிலே ஒரு பாங்கின் மானேஜராய் இருந்து கல்கியின் பண விவகாரங்களைக் கவனித்துக் கொண்ட அவர், கல்வித் தேர்ச்சியிலே சரித்திர ஆசிரியராய் இருக்கத் தகுதி வாய்ந்தவர். அவரையும் அவருடைய மனைவி, வசுமதி ராமசுவாமியையும், முன்பு அவர்கள் மாயூரத்தில் இருந்தபோதே கல்கிக்குத் தெரியும். அந்த ஊரில் காங்கிரஸ் பிரமுகராய் இருந்தவரும், கல்கியின் முயற்சிகள் பலவற்றில் துணை நின்றவருமான சுவாமி அய்யங்காரின் சகோதரி ஸ்ரீமதி வசுமதி. சமஸ்கிருதத்திலும் ஹிந்தியிலும் நல்ல தேர்ச்சி உள்ளவர். ராமசுவாமி தம்பதியர், 1938ல் சென்னையில் வசிக்கத் தொடங்கியது முதல், கல்கி குடும்பத்தின் நெருங்கிய நண்பர்களானார்கள். எழுதுவதில் வசுமதி ராமசுவாமி கொண்டிருந்த விருப்பத்துக்குக் கல்கி ஊக்கம் ஊட்டி, அவருடைய சிறு கதைகள் பலவற்றை வெளியிட்டார். அவர் ஈடுபட்டிருந்த சமூகப் பணிகள், மாதர் நல இயக்கங்கள் பற்றிக் கட்டுரைகள் எழுதச் செய்தும் வெளியிட்டார்.

ராமசுவாமி தம்பதியரும் அருணாசலமும் சொன்ன தகவல்களிலிருந்து, ''பார்த்திபன் கனவு'' நாவலை ஆனந்த விகடனில் இருக்கையிலேயே, கல்கி எழுதி முடித்து விட்டார் என்று நிச்சயமாய்த் தெரிகிறது. அப்படி என்றால் அதை ஏன் அவர் அந்தப் பத்திரிகையிலேயே வெளியிடவில்லை? வெவ்வேறு காரணங்கள் சொல்லப்படுகின்றன; ஆனால் அவற்றில் எதையும் ஒப்புக் கொள்ளத் தோன்றவில்லை. தமிழுக்கே முதலாவதான அந்தச் சரித்திர நாவல் அவருடைய சொந்தப் பத்திரிகையில் முதலாவதாய்ப் பிரசுரமாவதற்காகக் காத்திருந்தது என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

புது வீட்டில் புகுந்தபோதே ருக்மிணி அம்மாளை வருத்திக் கொண்டிருந்த வயிற்று வலி, நாளுக்கு நாள் அதிகமாகி, ஆபரேஷன் செய்யாமல் தீராது என்ற நிலை ஏற்பட்டது. வேலூர்தான் சிகிச்சைக்குச் சிறந்த இடம் என்று கல்கி தீர்மானித்து, மனைவியையும் குழந்தைகளையும் அங்கே கூட்டிக் கொண்டு போய்த் தங்கினார். அங்குள்ள பிரபல ஆஸ்பத்திரியின் நிபுணர்கள் நல்லபடியாய்ச் சிகித்சை செய்து, அந்த அம்மாளைப் பேராபத்திலிருந்தும் குடும்பத்தைப் பெரும் கவலையிலிருந்தும் காப்பாற்றினார்கள்.

மீண்டும் சென்னையில் கல்கியின் அலுவல் வரிசை முன்போல் தொடர்ந்தது. அரசியல், இலக்கியம், கலை விமர்சனம், மேடைப் பேச்சு என்று அலை அலையாகக் காரியங்கள். யுத்த நிலைமை, சுதந்திர இயக்கம் என்று அலை அலையான கவலைகள்.

கல்கி இயற்றி டி. கே. பட்டம்மாள் பாடிய பாடல்கள் சில இசைத்தட்டுக்களில் பதிவாகி, அந்த நாட்களில் அடிக்கடி வானொலியில் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தன. அவற்றில் ஒன்று, ''திரை கடல் தூங்காதோ?'' எனத் தொடங்கும் ஓர் இலக்கியப் பாடல். அதன் ஒவ்வொரு சரணத்தின் முடிவிலும், ''அலை ஓயாதோ?'' என்ற ஏக்கம். அதைக் கேட்கும்தோறும், எத்தனையோ விதமான உணர்ச்சி அலைகள் அகக் கடலில் எழுந்து மோதும். ஓய்வில்லாக் கடலின் ஓயாத அலை ஓசை! (தொடரும்)

---



**செவிடர்களுக்கு யோகம்!**

அமெரிக்க நகர் அலபாமாவுக்கு அருகிலுள்ள தொழிற்சாலையில் செவிடராக இருப்பவர்களை மகிழ்ச்சியுடன் உடனே வேலைக்கு எடுத்துக் கொண்டு விடுகிறார்கள். செவிடர்களைத் தொழிற்சாலையில் அதிகச் சத்தம் கேட்கும் பகுதிகளில் பணிபுரிய வைக்கிறார்கள்.

— சயன்ஸ் டைஜஸ்ட் - பி. எஸ். எம்.

# மாதர் இனமும் மகாகவியும்





' ஆணும் பெண்ணும்
நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம்
தழைக்கு மாம்
பூணுநல் லறத்தோடிங்குப்
பெண்ணுருப்
போந்து நிற்பது
தாய்சிவ சக்தியாம் '

என்று 'புதுமைப் பெண்'ணைப் படைத்துக் காட்டியவர் பாரதி. சர்வதேச மகளிர் ஆண்டில் வரும் பாரதி தினத்தில் இதை நினைவு கூர்வோம்.

' சாதம் படைக்கவும்
செய்திடுவோம்; தெய்வச்
சாதி படைக்கவும்
செய்திடுவோம் '

என்று 'பெண்கள் விடுதலைக் கும்மி'யில் மாதரார் மாண்பைப் பேசியவர் மகாகவி.

' மாதர் தம்மை
இழிவு செய்யும்
மடமையைக்
கொளுத்துவோம் '

என்று ஆர்ப்பரித்தவர்.

சிறுவன் சுப்பையாவை மேதினி போற்றக் கவியாக வளர்த்த பெருமை அவனது தாய்க்கே உரியது. 'மகாகவி பாரதியார்' என்ற தம் நூலில் அறிஞர் வ. ரா. இந்த நிகழ்ச்சியை இவ்விதம் உருக்கமாக எழுதியுள்ளார் :

' தம் தாயைப் பற்றிப் பாரதியாருக்கு நல்ல ஞாபகம் இருந்ததில்லை. அந்த வகையில் தமது அனுபவம் நிறைந்து பூர்த்தியாக இருக்கவில்லையே என்று அவர் மனம் வருந்துவார். அண்டை வீட்டுக் குழந்தைகளுக்கு இருந்த தாயின் சலுகை தமக்கு இருந்ததில்லையே என்று மனம் வாடுவார். தாயார் இந்த உலகை விட்டுச் சீக்கிரம் அகன்றதாலேயே, பாரதியார் சாகுமளவும் குழந்தையாக இருந்து வந்தார். நேற்றைய தினம் பிறந்த பெண் குழந்தையும் பாரதியாருக்கு அம்மா தான். வயதுக் கணக்கு அவருக்குத் தொந்தரவு கொடுத்ததேயில்லை. ''அம்மா, அம்மா'' என்று அவர் தமது பாட்டுக்களில் கூவி அழைத்திருப்பதை நீங்கள் எல்லோரும் படித்திருப்பீர்கள்.

'வீதியிலே ஒரு குழந்தையைத் தாயில்லாப் பிள்ளை என்று எவரேனும் சுட்டிக் காட்டி விட்டால் பாரதியார் அந்த இடத்திலேயே ஸ்தம்பித்து நின்று விடுவார். அவர் மனத்தில் என்ன என்ன எண்ணங்கள் தோன்றி மறையுமோ அவைகளை நான் அறிந்ததில்லை. ''என்ன ஓய்! எனக்கு அம்மா மயக்கத்திலிருந்து ஒரு நாளும் விடுதலை இல்லையா?'' என்று பக்கத்தில் இருக்கும் நண்பரை வினவிவிட்டுச் சிறிது நேரத்துக்கெல்லாம், ''அம்மா, அம்மா!'' என்று இசையிலே கூவுவார். ஆகவே கணிதத்தில் புலமை வாய்ந்த உயிர் உள்ள தகப்பனார் தம் பையனைக் கணித சாஸ்திரியாகச் செய்ய முடியவில்லை. மறைவிலிருந்த தாய் பாரதியாரைக் கவியாக வளர்த்து விட்டாள்.'

தன் மகனை மகாகவியாக்கி வளமான கவிதைச் செல்வத்தைத் தமிழ் மூலம் உலகுக்கே வழங்கச் செய்த இந்தத் தாயின் மாண்புதான் என்னே என்று இதனைப் படிப்பவர்கள் போற்றாமல் இருக்க முடியுமா?

' பெண்ணிற் பெருந்தக்க யாவுள ?' என்றார் வள்ளுவர். உண்மைதான் இக்கூற்று. வள்ளுவர் தந்துள்ள 1330 குறட்பாக்களின் திரண்ட கருத்துடன் வீட்டுப் பேற்றையும் அடக்கி ஒரே வெண்பாவில் பாடிவிடுகிறார் ஒரு பெண். என்னே இந்தப் பெண்ணின் சிறப்பு! யார் இந்தப் பெண் தெரியுமா? முத்தமிழ்க் கடவுளான முருகனால் ஞானத் தெளிவுபெற்ற ஔவையார் தான். 'காளிதாஸன்' என்ற புனை பெயரில் 26-5-1917ல் [பிங்கள வைகாசி 13] 'விடுதலை' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில் பாரதியார் இந்த வரலாற்றை இவ்விதம் சுவைபடக் கூறியுள்ளார். அப்பகுதி வரலாறு :

'திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று புருஷார்த்தங்களையும் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறளுக்குள் பாடிக் காட்டிய திறமையைக் கண்டு வியந்து சிலர் ஔவை



யாரிடம் சொன்னார்களாம். ஔவையார் நான்கு புருஷார்த்தங்களையும் ஒரே வெண்பாவுக்குள் பாடிக் காட்டினாளாம்.

ஈதல் அறம்; தீவினை விட்டீட்டல் பொருள்;
எஞ்ஞான்றும்
காதலிருவர் கருத்தொருமித் - தாதரவு
பட்டதே யின்பம்; பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

'கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்' பாடிய வள்ளுவரையும் வாயடைத்துப் போகச் செய்யக்கூடிய ஔவை மூதாட்டியின் சிறப்பு எப்படிப் பார்த்தீர்களா ?

பாரதியார் சுவாமி விவேகாநந்தரின் ஞானப் புதல்வியாரான நிவேதிதா தேவியைத் தமது ஞான குருவாக வரித்தவர் :

அருளுக்கு நிவேதனமாய் அன்பினுக்கோர்
கோயிலாய் அடியேன் நெஞ்சில்
இருளுக்கு ஞாயிறாய் எமதுயர்நா
டாம்பயிர்க்கு மழையாய், இங்கு
பொருளுக்கு வழியறியா வறிஞர்க்குப்
பெரும் பொருளாய்ப் புன்மைத் தாதச்
சுருளுக்கு நெருப்பாகி விளங்கிய தாய்
நிவேதிதையைத் தொழுது நிற்பேன்

என்று நிவேதிதையைத் தொழுது பாடியுள்ளார், பாரதியார் சான்றோர் வரிசையில்.

1906ஆம் ஆண்டு பாரதியார் ஸ்ரீமதி நிவேதிதா தேவியைக் கல்கத்தா அருகில் உள்ள ''டம் டம்'' என்ற இடத்தில் தரிசிக்கும் பேறு பெறுகிறார். இந்தச் சுவை மிகுந்த சந்திப்பைத் தமது 'பாரதியார் சரித்திரத்'தில் ஸ்ரீமதி செல்லம்மா பாரதி இவ்விதம் எழுதியுள்ளார் :

பாரதியார் முதலில், 'என்னதான் விவேகாநந்தருடைய சிஷ்யையாயிருந்தாலும் ஆங்கில மாதுதானே!' என்ற மனோபாவத்தோடு இருந்தார். இது அம்மையார் மனத்துக்குப் புரிந்தது. உடனே, 'மகனே! உன் மனத்தில் பிரிவு உணர்ச்சியை நீக்கு. ஜாதி, மதம், குலம், கோத்திரம் என்ற அநாகரிகமான வித்தியாசங்களை விடு. அன்பை மட்டும் அகத்தில் கொள். பிற்காலத்தில் நீ ஒரு தீரனாக — சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற தேவனாக வருவாய்' என்றுரைத்துவிட்டு, 'அன்ப, உனக்கு இன்னும் விவாகம் ஆகவில்லையா?' என்றார்.

பாரதி வெட்கித் தலை குனிந்தார். பின்பு 'தாயே ! எனக்கு விவாகமாகி, இரண்டு வயதான பெண் குழந்தை ஒன்றும் இருக்கிறது' என்றார்.

'' நிரம்பச் சந்தோஷம் ! ஆனால், ஏன் உடன் அழைத்து வரவில்லை ?'' என்றார் அம்மையார்.

'' இன்னும் எங்களில் மனைவியைச் சரிசமமாகப் பொது இடங்களுக்கு அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. மேலும், காங்கிரசுக்கு அவளை அழைத்து வந்தால், என்ன பிரயோசனம் ?'' என்றார் பாரதியார்.

இதைக் கேட்டு அம்மையாருக்கு வெகு கோபம் உண்டாயிற்று. ''மகனே ! புருஷர்கள் அநேகம் பேர் படித்தும் ஒன்றும் அறியாத சுயநல வெறி கொண்டவர்கள். ஸ்திரீகளை அடிமைகளென மதிப்பவர்கள். உன் போன்ற அறிவாளிகள்கூட இப்படி ஸ்திரீகளுக்குச் சம உரிமையும், தகுந்த கல்வியும் கொடுக்காவிட்டால், எப்படி நாடு சமூகச் சீர்திருத்தம் அடையும் ?'' என்று அன்பாகக் கடிந்துரைத்துவிட்டுப் பின்பு, '' சரி, போனது போகட்டும். இனி மேலாகிலும் அவளைத் தனியென்று நினைக்காமல் உனது இடது கை என்று மதித்து மனத்தில் அவளைத் தெய்வமெனப் போற்றி நடந்து வருதல் வேண்டும் !'' என்றார்.

அப்படியே வாக்களித்து, தேவியாரிடம் உபதேசம் பெற்றுத் திரும்பினார். தேவியார் தாம் இமாலயத்திலிருந்து கொணர்ந்த ஓர் இலையை — ஆலிலை அளவு இருக்கும்—பாரதியாருக்கு ஞாபகார்த்தமாக அளித்தார். (அது பாரதியார் காலமான சமயம் எங்கேயோ தவறி விட்டது.) அதைப் பாரதியார் ஒரு பொக்கிஷம் போல் போற்றி வந்தார். சில நண்பர்கள் தக்க விலை கொடுப்பதாகக் கேட்டுப் பார்த்தும்கூட அதை அவர் கொடுக்க விருப்பப்படவில்லை.

பாரதியார் நிவேதிதா தேவி அம்மையாரிடம் உபதேசம் பெற்றதைப் பின்வரும் ஆனந்தக் களிப்பு மூலமாகவும் தெரிவித்திருக்கிறார்.

சொன்ன சொல் ஏதென்று சொல்வேன்-என்னைச்
சூதாய்ந்து விக்கவே சும்மா யிருத்தி
முன்னை யேது மில்லாதே - சுக
முற்றச் செய்தே யெனைப் பற்றிக் கொண்டாரே
பற்றிய பற்றற்ற ஒன்றே - தன்னைப்
பற்றச் சொன்னார் பற்றிப் பார்த்தவிடத்தே
பெற்றதை யேதென்று சொல்வேன் - சற்றும்
பேசாத காரியம் பேசினார் தோழி.

பெற்ற தாயுடன் பாரதியாருக்கு ஞான குருவாகவும் ஓர் அன்னையாரே வாய்த்தது எவ்வளவு பொருத்தம் !

மாதரார் மாண்பு குறித்தும், அவர்கள் முன்னேற்றத்துக்காகவும் பாரதியார் பல பாடல்கள் பாடியுள்ளதை அறிவோம். அரிய கட்டுரைகளும் வரைந்துள்ளார். தம் முப்பெரும் பாடல்களில் ஒன்றாக அவர் 'பாஞ்சாலி சபதத்'தைத் தேர்ந்தெடுத்ததும் இந்த மகளிர் ஆண்டில் சிந்திக்கத் தக்கது.

பாரதியாருக்கு வாய்த்த மக்கட் செல்வம் தங்கம்மா, சகுந்தலா என்று பெயர் அமைந்த இரண்டு பெண்கள் மட்டுமே. பெண்கள் கட்சியில் நின்று கவிஞர் கனிவுடன் பேசியதற்கு இதையும் ஒரு சுவையான காரணமாகக் கொள்ளலாம்தானே !

'பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா !

— வி. ச வாசுதேவன்

---



''உங்களுடைய எழுத்துக்கும், பேச்சுக்கும் இப்பொழுது வரவேற்பு எப்படி இருக்கிறது ?''

''பிரமாதமாய் இருக்கிறது. நான் கூட்டங்களில் பேச ஆரம்பித்த உடனேயே எல்லோரும் கைதட்டுகிறார்கள். தொடர்கதைகள் எழுத ஆரம்பித்த முதல் இதழிலேயே ''கதையின் முடிவு பிரமாதம்'' ''இவ்வளவு சீக்கிரம் முடித்திருக்க வேண்டாம் '' என்றெல்லாம் கடிதங்கள் வருகின்றன !''

- ப. த. தங்கவேலு

## கதிராமங்கலம்
## ஸ்ரீ வெள்ளைப் பிள்ளையார் கோவில்
## ஜீர்ணோத்தாரண கைங்கர்யம்

நவதுர்க்கா க்ஷேத்ரங்களில் ஒன்றான தஞ்சை மாவட்டம், கதிராமங்கலத்தில், ஸ்ரீ ஞானாம்பிகா சமேத காளஹஸ்தீசுவர சுவாமி கோவிலின் கீழ் எல்லையில் உள்ள ஸ்வேத விநாயகர் என்னும் வெள்ளைப் பிள்ளையார் கோவில் சிதிலம் அடைந்துள்ளது. அதை ஜீர்ணோத்தாரணம் செய்து, அனைத்துக் கோவில்களுக்கும் கும்பாபிஷேகம் செய்வதாகத் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. காமகோடி பீடம், ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் அவர்களின் பரிபூர்ண அநுக்ரஹத்துடன், இந்த ஆலயங்களின் திருப்பணி, கும்பாபிஷேக கைங்கர்யங்களைத் தொடங்கித் திருப்பணி பூர்த்தி செய்யப்பட்டு விட்டது. அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது. இப் புனித கைங்கர்யத்தில் கலந்து கொண்டு தங்களால் இயன்ற பொருளுதவி செய்து தெய்வீக அருளுக்குப் பாத்திரர்களாகுமாறு கோருகிறோம்.

இப்படிக்கு,
கிராமவாசிகள் சார்பாக திருப்பணிக் கமிட்டி

பொருள் அனுப்ப வேண்டிய முகவரி:

**ஸ்ரீ கே. ஸ்ரீநிவாசன்**
சங்கர நிலயம், வடக்குத் தெரு,
**கதிராமங்கலம்**
குத்தாலம் வழி (தஞ்சை மாவட்டம்)

# துப்பறியும் இருவர்

## சினிமாக் கதை : 8



ரா. வீழிநாதன்

"பகவானே! நாங்கள் தொடங்கியிருக்கும் தனியார் துறைப் புலனாய்வு நிறுவனத்துக்கு வாடிக்கையாளர்களைப் பிடித்துத் தா. கிடைப்பதில் பாதி உனக்குத் தருகிறோம்!" என்று கோயிலைக் கண்ட பொழுது வேண்டிக் கொண்ட தரம்சந்தும் கரம் சந்தும் மாதா கோயிலையும் மசூதியையும் பார்த்தபொழுதும் இதே வேண்டுகோளை விடுக்கத் தவறவில்லை.

அப்புறம்தான் கரம்சந்துக்குத் திடுமென்று ஞானோதயம் பிறந்தது. "ஏன், தரம்சந்த்! கிடைப்பதில் பாதி தருவதாக ஒவ்வொரு கடவுளிடமும் வேண்டிக் கொண்டுவிட்டோமே! மூன்றாவது கடவுளின் வீதத்துக்குப் பணம் கொடுப்பதென்றால், நம் நிறுவனம் நஷ்டத்தில் அல்லவா ஓடும் போல் இருக்கிறது! இப்போதே அலுவலக வாடகை, மளிகை, ஜவுளி, பால் என்று பல கடன் தொல்லைகள்! டெலிபோனுக்குக்கூடப் பணம் கட்டவில்லை. ஒரு நாளைக்கு அவன் வந்து தொடர்பைத் துண்டித்துவிடப் போகிறான்!" என்றான்.

"அட, மக்கு! வேண்டிக் கொண்டால் கொடுக்க வேண்டும் என்று எங்கே எழுதியிருக்கிறது? அதோடு ஆண்டவன் அருளாளன். பகவானோ பரம கருணாமூர்த்தி. அல்லாவோ இருவருக்கும் சளைவில்லை. அன்பர் புரியும் அத்தனை குற்றங்களையும் மன்னித்தருள்வான். ஆனால் மனிதன் மன்னிக்கமாட்டான். அவனுக்கு வாக்குக் கொடுக்கிற போதுதான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!" என்று கூறிக்கொண்டே வந்த தரம்சந்த் அலுவலக வாசலில் நிலுவைக்காரர்கள் ஈட்டிக்காரர்கள் போல் நிற்பதைக் கண்டான். "பார், நான் சொன்னது எவ்வளவு நிஜம் என்கிறதை! இன்றைக்குப் பணம் தருவதாக வரச் சொல்லியிருந்தோமா? வந்து ஈயாக மொய்த்துக் கொண்டுவிட்டார்கள்!" என்று கூறியபடியே கண மிடுக்காகக் கரம்சந்தின் கையோடு கைகோத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். அதே கையோடு படீரென்று கதவை அறைந்து தாளிட்டுக் கொண்டு உள்ளே போய் அமர்ந்துவிட்டான். இருவரும் யோசனையில் ஆழ்ந்தனர், இந்த இக்கட்டிலிருந்து எப்படித் தப்புவது என்று!

தொலைபேசி மணி ஒலித்து அவர்கள் யோசனையைக் கலைத்தது. தொலைபேசியை எடுப்பதா, வேண்டாமா என்று ஒரு கணம் தயங்கினர். தொடர்பைத் துண்டிக்கும் எச்சரிக்கையாக இருக்குமோ என்ற ஐயம்.

''தலைக்கு மேல் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன? எடு, நடப்பது நடக்கட்டும்!'' என்று தைரியம் கூறினான் கரம்சந்த்.

''ஹலோ ! யாரு? ஸேட்.... உடனே வரணுமா? முடியாதே, சார், இப்போ இருக்கிற நிலையிலே! எதுக்கும் முகவரியைச் சொல்லுங்கோ!'' என்று செய்தியை வாங்கிக் கொண்ட தரம் சந்த், ''ஆண்டவன் நம் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்துவிட்டானடா! பெரும் புள்ளி கூப்பிடறதுடா ! ஆனால் எப்படியடா போறது?'' என்று கேட்டான்.

''கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிரித்துக் கொண்டு கொடுக்கும்கிறது எவ்வளவு உண்மை, பார்த்தாயா ? புறப்படு !'' என்றான் கரம்சந்த்.

'' எப்படி ? வாசல்லே அத்தனை பேர் நிற்கிறாங்களே! மொல்லு மொல்லுன்னு சண்டைக்கு வந்துவிடுவாங்களே!''

''கவலைப்படாதே ! கூரையைப் பிரித்துக் கொண்டு போய்விடுவோம்!'' என்ற கரம் சந்த் தன் சொல்லைச் செயலாகவே காட்டிவிட்டான்.

அடுத்த சில நிமிடங்களில் அவர்கள் இருவரும் கோடீசுவர ஸேட் வீட்டில் இருந்தனர்.

''வெளியிலே போன என் மகள் இன்னும் வீட்டுக்குத் திரும்பவில்லை ! எங்கே போனாளோ, தெரியவில்லை! காதோடு காது வச்சாப் போல அவளைக் கொண்டு வந்து சேர்த்துடணும். என் மானம் பறிபோகக் கூடாது. நீங்க கேட்கிற தொகையைத் தந்துவிடுகிறேன்!'' என்றார் ஸேட்.

'' ஒரு பத்து ரூபா....''

'' பத்தாயிரம்தானே ? பேஷா வாங்கிக்குங்க. இந்தாங்க அச்சாரம் ஐயாயிரம் !'' என்றார் ஸேட். அதைக் கேட்ட தரம்சந்த் சுய நினைவு பெற விசிற வேண்டியிருந்தது.

''பெண்ணுடைய புகைப்படம் ஒன்று வேண்டுமே!'' என்றான் கரம்சந்த்.

''இதோ தருகிறேன்!'' என்று உள்ளே போய்த் தேடி எடுத்து வந்தார் ஸேட். போகிற போது மூக்குக் கண்ணாடியோடு போனவர் திரும்புகிறபோது வெறுங்கண்ணோடு வந்தார். மூக்குக் கண்ணாடி தவறிக் கீழே விழுந்து உடைந்துவிட்டதே காரணம் !

* * *

''டேய் ! இது ஒரு காதல் கேஸ். நீ என்ன சொல்றே ?''

''நானும் அதையே சொல்றேன்!''

'' டேய் ! நாம் ராதாவைப் பிரிஞ்சு ராம்ப நாளாச்சுடா ! அவளுக்கு உடம்பு குணமாகியிருக்கும். நம் கையிலே இன்றைக்கு நாலு காசு இருக்கிறது. அவளையும் அழைச்சுக்கிட்டுப் போவோமேடா !'' என்றான் தரம்சந்த்.

'' எத்தனையோ நாள் கழித்துக் காசைப் பார்த்திருக்கிறோம். பெட்ரோல் விற்கிற விலையிலே அதெல்லாம் வேண்டாமடா. காலாற நடந்தே போவோம்!'' என்றான் கரம்சந்த்.

''பெட்ரோல் சொட்டுக்கூடச் செலவாகாமல் இருக்கணும், அவ்வளவுதானே ?... அதை என் பொறுப்பிலே விடு. ஆபத்து—சம்பத்துக்கு உதவ அரை லிட்டர் வேணுமானால் போட்டுக்க! என்ன?''

லாரல், ஹார்டியை அல்லது தங்கவேலு — நாகேஷை நுப்பறியும் நிபுணர்களாக்கினால் எப்படியிருக்கும் ? அப்படியிருக்கிறது '' தோ ஜாஸூஸ்'' இந்திப் படமும். கதையம்சத்திலுள்ள குறைபாடுகளை மறந்து கோமாளித்தனங்களை மட்டுமே பார்ப்பவர்களுக்குச் சுவையான படம்.

''சரி, அப்புறம் உன் இஷ்டம் !''

இருவரும் வொர்க் ஷாப்புக்குச் சென்று 'ராதா' என்று அன்புக்கன்பாகத் திருநாமம் சூட்டியிருந்த தங்கள் மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டனர்.

அப்பொழுது சாலை வழியே ஒரு கார் வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தது. கரம் சந்த் 'ஸ்டார்ட்' செய்த அடுத்த கணமே தரம் சந்த் 'ஸ்டாப்' என்றான். ஆனாலும் மோட்டார் சைக்கிள் வேகமாகக் காருக்கு இணையாகப் போய்க் கொண்டிருந்தது.

''எப்படி நம் வேலை?'' என்றான் தரம்சந்த்.

''பலே ஜோர் !'' என்று பாராட்டினான் கரம்சந்த்.

தரம்சந்த் குறி பார்த்து விட்டெறிந்த கொக்கி காரின் பின்புறத்துப் பம்பரில் மாட்டிக் கொண்டு கார் போன திசையெல்லாம் மோட்டார் சைக்கிளையும் இழுத்துச்சென்றது.

கார் ஓட்டிக்கு ஒரே ஆத்திரம், இந்த மோட்டார் சைக்கிள் தன்னை ஏன் பின் தொடர்கிறது என்று ! மக்கள் நடமாட்ட மற்ற ஓரிடத்தில் நிறுத்தி, ''என்னை ஏன் பின் தொடருகிறீர்கள்?'' என்று சீறினான்.

தரம்சந்த் காரின் பம்பரில் மாட்டிக் கொண்டிருந்த கொக்கியைக் காட்டிச் சிரித்தான். . அதற்குள், ''என்னைக் காப்பாற்றுங்கள், என்னைக் காப்பாற்றுங்கள் !'' என்ற குரல் காருக்குள்ளிருந்து வந்தது. பார்த்தால் பயப்பிராந்தியுடன் ஒரு பெண் !

தரம் சந்த் தன் பையிலிருந்த போட்டோவை எடுத்து ஒத்திட்டுப் பார்த்தான். ''கரம் சந்த்! அதே பெண்!'' என்று கூவினான். இருவரும் காரோட்டியை மடக்கிக் கொண்டார்கள். அவர்களுக்கிடையே நிகழ்ந்த மோதலில், அந்தப் பெண் எப்பொழுது நழுவினாள் என்பது மூவருக்குமே தெரியாது. 'சிக்கிய பறவை சிறகடித்துப் பறந்துவிட்டது ! இருந்தாலும் யார் விட்டார்கள் ?' என்று மூவருமே கறுவிக் கொண்டு பிரிந்தனர்.

* * *

தரம் சந்தும் கரம் சந்தும் விடவில்லை. எத்தனையோ சாகசங்களை அனுயாசமாகச் செய்து அந்தப் பெண்ணைக் கண்டுபிடித்து அவள் அப்பன் வீட்டில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

''ஸேட் ஜீ ! இந்தாருங்கள், உங்கள் பெண்! பத்திரம், பத்திரம் !''

'' என் பெண்ணா ? அவள் அன்றைக்கே வந்துவிட்டாளே!''

''அப்போ இவள் ?''

''யாரோ ?''

''இந்த ஃபோட்டோவைக் கொடுத்துன்னா எங்களை நீங்கள் உங்க பெண்ணைத் தேடச் சொன்னீங்க!''

''ஏதோ தவறு நடந்திருக்கிறது. அன்றைக்கு மூக்குக் கண்ணாடி உடைஞ்சு போயிட்டதனாலே தவறிப் போய் இந்தப் போட்டோவைக் கொடுத்துவிட்டிருக்கிறேன். மன்னிச்சிடுங்க, ஐயா !''

'' தரம் சந்த் ! இப்போ இந்தப் பெண்ணை என்ன செய்கிறது?'' என்று கேட்ட கரம் சந்த், ''அம்மா ! எங்க மூளை ஏற்கனவே குழம்பிக் கிடக்கிறது. நீ யாரு, என்னங்கிறதை விவரமாகச் சொல்லு! எங்களாலே ஆன உதவியை உனக்குச் செய்கிறோம்!'' என்றான்.

பிங்கி தன் கண்களால் பார்த்துவிட்ட கொலையைக் கூறித் தான் அபாயத்தில் சிக்கியிருப்பதையும் கூறவே, ''இதோ, பார் ! உன் ஆபத்து நீங்குகிற வரைக்கும் நாங்கள் சொல்கிறதைக் கேளு. எங்களுக்குத் தெரிந்த மீனவர் ஒருவர் இருக்கிறார். அவர் வீட்டிலே தங்கியிரு ! அவருக்கு ஒரு பெண் இருக்கிறாள். உன்னை நல்லபடியாகப் பார்த்துக்கொள்வாள்! அந்தக் கொலைகாரப் பாவியை நாங்க கண்டு பிடிச்சுப் போலீஸிலே ஒப்படைக்கிறோம்.... நாங்கள் யார் தெரியுமில்லே ? தரம் சந்த், கரம் சந்த் — தனியார் துறைப் புலனாய்வாளர்கள் ! இந்தப் பிரேம் சோப்ரா எப்பவுமே இப்படித்தான். ஏதாவது தப்புத் தண்டா காரியம் செய்துவிட்டுக் கடைசியில் அடியும் உதையும் வாங்கிக் கொள்ளுவான் !'' என்றார்கள்.

* * *

''டேய், சோப்ரா! நீ வெறும் சோக்ராப் பயலடா ! உன் நடத்தை கெட்ட தனம் பொறுக்காமல், உன் சித்தப்பன் பல லட்சம் பெறுமானம் உள்ள சொத்தைப் பிங்கி பெயருக்கு எழுதி வைத்து விட்டானேயடா! பேசாமல் அவளைக் காதும் காதும் வச்சாப்பலே கல்யாணம் பண்ணிக் கொண்டு இருக்கலாமோ, இல்லையோ? அதை விட்டு அவளைக் கொலை பண்ணித் தொலைச்சயேடா!'' என்றான் சோப்ராவின் நண்பன் ஒருவன்.

'' இருக்கலாம்தான். இருந்தாலும் நான் செய்த கொலையை அவள் கண்ணால் பார்த்தவள். என்றைக்காவது ஒரு நாள் அவள் கண் என்னைக் காட்டிக் கொடுத்துவிடும். அதனால் தான் அவளை அப்படித் தீர்த்துக்கட்டினேன்.''

பிரேம் சோப்ரா இப்படிக் கூறிக் கொண்டிருந்த பொழுதே அவன் கையாள் ஒருவன் வந்து, ''எசமான் ! நம் முயற்சி பலிக்கலே ! பிங்கி உயிரோடு இருக்கிறது, மீனவர் குடியிருப்பிலே ! இந்த விவரம் தெரிஞ்ச நம்ம தலைவர், அந்தப் பெருஞ் சொத்துக்கு ஆசைப்பட்டுப் பிங்கியின் அம்மாவைப் பிடித்து வந்து கிட்டிகட்டி நெருக்குகிறார் ! அந்தப் பெண்ணைத் தம் மகனுக்குக் கல்யாணம் கட்டி வைக்கப் போகிறாராம் !'' என்றான்.

''இந்தப் பிரேம் சோப்ரா உயிரோடு இருக்கிற வரை அது நடக்காது. நடக்கவிட மாட்டான் !'' என்று கூறி ஆத்திரத்தோடு புறப்பட்ட பிரேம் சோப்ரா, ''பிங்கியை நானே கல்யாணம் செய்து கொள்வேன். அதே கையோடு கொலையும் செய்வேன்!'' என்று சூளுரைத்தான்.

''பாஸ் ! தவளைக்குச் சாவு வந்தால் தெருவிலே புறப்படும்பாங்க! இந்தப் பிங்கி விஷயத்திலே நீங்கள் தலையிட்டு உங்க அசட்டுப் பிள்ளையை அதன் தலையிலே கட்டப் பார்த்தீங்கன்னா உங்க உயிரு உங்களுக்கு இல்லை!'' என்று நேரிடையாகவே தலைவருடன் மோதினான் சோப்ரா.

''பார்த்துவிடுவோமா ?''

''பார்த்துவிடுவோமா ?''

பார்த்துவிட்டது ; பதம் பார்த்துவிட்டது பிரேம் சோப்ராவின் துப்பாக்கி, அவன் தலைவரை !

''சோப்ரா ! தவளைக்குச் சாவு வந்தால் தெருவிலே வரும். கொலையாளிக்குச் சாவு வந்தால் கூண்டிலேறி வரும். உன் காருக்கு முன்பு கொக்கி போட்டேன். இப்போ உனக்கே கொக்கி போட்டிருக்கிறேன். இந்த முறை கழட்டிக்கிட்டு ஓட முடியாது. அப்படி நாலு பக்கமும் பந்தோபஸ்து பண்ணியிருக்கிறேன் ! மரியாதையாகப் போலீசாருங்க காட்டற விலங்குக்குக் கையை நீட்டி விடு !'' என்றான் தரம் சந்த்.

''பிங்கி! நீ இனி மேல் பயப்படாமல் தைரியமாக உன் காதலன் அசோக்குக்கு உன் கழுத்தை நீட்டலாம்'' என்ற கரம்சந்த், ''இன்ஸ்பெக்டர் சார் ! குற்றவாளியைப் பிடிச்சுக் கொடுத்த தரம் சந்த் — கரம் சந்துக்கு எப்போ சார் பரிசுக் கவரை நீட்டுவீங்க!'' என்று கேட்டான்.

---

### அருணகிரிநாதர் நூற்றாண்டு விழா

ஆறு நூற்றாண்டுகள் காணும் அருணகிரிநாதருக்குச் சென்னையில் சிறப்பாக விழா நடந்தது. அருணகிரிநாதர் உருவம் பொறித்த தபால் தலைகளை மத்திய அமைச்சர் திரு ஜகந்நாத் பகாடியா வெளியிடத் திரு நெடுஞ்செழியன் பெற்றுக் கொண்டார். விழாவுக்கு ஆளுநர் திரு கே. கே. ஷா அவர்களை வரவேற்று அழைத்து வருகிறார் திரு ஆர். வேங்கடராமன். அவருக்குப் பக்கத்தில் விழாக் கமிட்டி காரியதரிசி திரு ஏ. எஸ். ராகவன்.

அருணகிரிநாதர் விழா புதுதில்லியில் இம்மாதம் 13, 14 தேதிகளில் சிறப்பாக நடைபெறவிருக்கிறது.





# ஃபயூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

## டாடா ஃபைஸன் ராலீஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3ஜீ மருநது

**நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகிறது. இது பயிா முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெற்பயிரைத் தருகிறது; ஹெக்டேருக்கு மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகிறது.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப் படுகிறது ஃப்யூராடான் 3ஜீ. இது பயிர் முழுவதும் பரவும் நஞ்சியல்பு கொண்ட மருந்தாகும். இதை நிலத்திலும், நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால் பயிர்கள் வேர்கள் மூலம் அதை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் அதன் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளைக் கட்டுப் படுத்து-கிறது.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதியமுறை, அதாவது விதைகள் / நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைப்பற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒருமுறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:
**ராலீஸ் இந்தியா லிமிடெட்**
ஃபெர்ட்டிலைஸர்ஸ் & பெஸ்டிஸைட்ஸ் டிவிஷன், 320, லிங்கி செட்டி தெரு, சென்னை 600 001.

**விசேஷ சிறப்பம்சங்கள்**
ஃப்யூராடான் 3ஜீ, மேலாகத் தூவப்படும் பூச்சிக்கொல்லிகளை விடச் சிறந்தது; விசேஷப் பயனுள்ளது.

- நெற்பயிரைத்தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அசிக்-கும் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகிறது.
- விசேஷ கருவிகளின் உதவியின்றியே கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப் படுத்து-கிறது.
- பூச்சிகளை விரைவில் தாக்குவதற்காக பயிர் முழுவதும் உடனடியாகப் பரவி விடுகிறது.
- இதை மழை அடித்துச்செல்ல முடியாது... தொடர்பு மருந்துகளைவிட நீண்ட காலம் பாதுகாப்புத் தருகிறது.
- தானிய மணியில் மருந்து தங்காது, நாற்றமடிக்கவோ செய்யாது.
- இந்தப் பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டுமே பாதிக்கும்; பயிருக்கு சாதகமான பூச்சிகளுக்கு ஆபத்தில்லை.




**அதிக நெல் விளைச்சல் பெற...ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள்**

OBM 3134R TM




## 22

விஜயாவிடம் உமா அவளது 'பிச்சை'யை எதிர்பார்க்கவில்லை என்று எரிச்சலோடு கூறினாள் அல்லவா?

அதைக் கேட்டு உடனே ''இதென்ன 'காம்ப்ளெக்ஸ்' உனக்கு? ராகேஷ் ரொம்ப நல்லவர். இதை ஏன் நீ புரிஞ்சுக்க மாட்டேங்கறே?'' என்றாள் விஜயா.

''நீ அவனைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டாம்னு நான் சொல்லலியே... நீ கொடுக்கப் போற பணம் எங்களுக்கு வேண்டாம், அதானே நான் சொல்றேன்.''

''இத்தனை நாட்களா யார் பணம் கொடுத்தா?''

''நீ சம்பாதிச்சுக் கொடுக்கிற பணத்துக்கும் கல்யாணம் பண்ணிண்டு புக்காத்துப் பணத்தை அனுப்பறதுக்கும் வித்தியாசம் இல்லியா? ஒரு பணக்காரப் பையனுக்குப் பெண்டாட்டியாப்போறது சம்பாத்தியமா?''

விஜயாவுக்கு அசாத்தியக் கோபம் வந்தது. ஒரு நிமிஷத்தில் எப்படித் தூக்கி எறிந்து பேசிவிட்டாள்? ஏன் இப்படிப் பேசுகிறாள்? பொறாமையோ? — இருக்கலாம். இல்லையென்று எப்படிச் சொல்ல முடியும்? ஒரு பணக்காரப் பையனுக்கு மனைவியாகப் போவதை விபசாரம் என்பது போலல்லவா பேசுகிறாள்? அம்மாவும் அவளைக் கண்டிக்காமல், வாயை மூடிக் கொண்டிருக்கிறாளே? அம்மாவின் அபிப்பிராயமும் இதுதானோ? இந்த வீட்டுக்கு நான் 'அந்நியமாகி' விட்டேன்! இதை விட வேறு என்ன கொடுமை வேண்டும்! பள்ளிக்கூடத்திலிருந்து வந்த பானு, புத்தகப் பையைக் கீழே வைத்து விட்டு, உமாவின் அருகில் போய் நின்றாள். அவள் என்னுடன் பேசாமல் கண் கொட்டாமல் என்னையே பார்த்துக் கொண்டு நிற்கிறாள்.... இத்தனை வருஷங்களாக நான்தான் தலை பின்னி விட வேண்டும் என்று அடம் பிடித்தவள், இப்பொழுது வேறு யாரையோ பார்ப்பது போல் என்னைப் பார்த்துக்கொண்டு நிற்கிறாள்.

''பானு! வாயிலிருந்து விரலை எடு'' என்று கண்டித்தாள் உமா. ''இந்தப் பழக்கம் இத்தனை வயசாகியும் இன்னும் விடவில்லையே உனக்கு?''

''வேறே எத்தனையோ பரம்பரைப் பழக்கங்களைக் கண்மூடித்தனமா நாம் பின்பற்றிண்டிருக்கோம், இதுவா ஒரு பெரிய கெட்ட பழக்கம்?'' என்றாள் விஜயா.

உமா பதில் பேசவில்லை. அம்மா குடித்து விட்டு வைத்த காப்பிப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு உள்ளே போனாள்.

''சொல்லிப் பார்க்கிறோம். இல்லை அப்படித்தான் வாயிலே விரலை வைச்சுப்பேன்னு அவ அடம் பிடிச்சான்னா யார் என்ன செய்ய முடியும்?'' என்றாள் அம்மா.

''அந்த மாமா வரலையா அக்கா?'' என்றாள் பானு.

''எந்த மாமாடி?'' என்று கேட்டாள் அம்மா.

''நேத்திக்கு அக்காவோட வந்தாரே... ராகேஷ் மாமா.''

''அவன் வந்தா என்ன, வராட்டா என்ன, உனக்கு என்னடி கவலை? பள்ளிக்கூடத்திலே இருந்து வந்திருக்கே, கை காலை அலம்பிண்டு காப்பி குடிக்கப் போ'' என்றாள் அம்மா.

பானு உள்ளே போய்விட்டாள்.

''குழந்தையை ஏன் இப்படிக் கோவிச்சுக்கறே?'' என்று கேட்டாள் விஜயா.

''பின்னே யாரைக் கோவிச்சுக்கிறது, சொல்லு.''

அம்மா இப்பொழுதுதான் இப்படிப் பேசுகிறாள். அப்பா இருந்தவரை பேசவே மாட்டாள். ஒருவேளை அப்பொழுது இவ்வாறு பேசியிருந்தாளானால், அப்பா சீட்டாடப் போயிருக்கவே மாட்டாரோ என்னவோ?

இந்த வீட்டில் எல்லோரும் என்னை எதிர்க்கிறார்கள். இவர்கள் அனைவரையும் விரோதித்துக் கொண்டுதான் ராகேஷை மணக்க வேண்டும். அம்மா முதலில் சம்மதிப்பாள் போல்தான் தோன்றியது. ஆனால் திடீரென்று மாறிவிட்டாள். இதற்கு உமாவின் போதனை காரணமாக இருக்கலாம். ஆனால் உமா இதை ஏன் இப்படி எதிர்க்கிறாள்? இந்தக் காலத்துப் பெண், அவளால் என்னை ஏன் புரிந்துகொள்ள முடியவில்லை? அஞ்சலி மீதுள்ள கோபம் காரணமாக இருக்கலாம். அஞ்சலி பணம் படைத்தவள். திமிர் பிடித்

தவன். இவனுடன் பேசுவதில்லை...இவன் உலகம் வேறு, அவள் உலகம் வேறு. உமாவுக்கு 'பாய் ஃபிரண்ட்ஸ்' இல்லை; இருக்கும் இரண்டு புடவைகளை மாற்றி மாற்றிக் கட்டிக்கொண்டு போகும் ஒரு பெண்ணுக்கு 'பாய் ஃபிரண்ட்' எங்கிருந்து கிடைப்பான்? இந்தக் கோபத்தை அவளுக்கு யார் மீது காட்டுவது என்று தெரியவில்லை. நான் இதுவரை இதைப் பற்றி எண்ணிப் பார்க்கவே யில்லை. உமா சங்கோஜி. யாருடனும் கலகலப்பாகப் பழகமாட்டாள். அவள் உண்டு, அவள் படிப்பு உண்டு. இதைத் தவிர அவளுக்கு வேறொன்றும் தெரியாது. என்னைவிட நிறம் கொஞ்சம் மட்டு. இதுவும் அவள் கோபத்துக்குக் காரணமாக இருக்கலாம். 'நீ நன்னா இருக்கே, கெட்டிக்காரின்னு ஒரு தாற்காலிக ஈடுபாடா ராகேஷுக்கு இருந்ததுன்னா?' என்று சற்றுமுன்தான் சொன்னாள். ஒருவேளை இதுதான் அவள் நம்பிக்கையா? அவள் மனநிலை எனக்கு இப்பொழுதுதான் புரிகிறது.

மனைவியைக் கொன்றவர் வீட்டுக்கு நான் மருமகளாகப் போகிறேன் என்று தெரிந்ததும் அம்மா எப்படி வெடிக்கப் போகிறாள் என்பதை இப்பொழுது நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவர் கொல்லவில்லை என்பதை என்னால் எப்படி விளக்கிச் சொல்ல முடியும்?—

விஜயா மறுபடியும் கட்டிலில் சென்று படுத்தாள்.

''என்னடி, உடம்பு சரியில்லையா சொல்லேன். திரும்பத் திரும்பப் போய் சாயந்திர வேளையிலே படுத்துக்கறே'' என்றாள் அம்மா.

''சும்மாத்தான் அம்மா. படுத்துக்கிறதுக்குக் கூடவா நேரம் வேளைன்னு பஞ்சாங்கத்தைப் பார்க்கணும்?''

''என்ன நாளைக்குப் போய் வசந்தியைப் பார்க்கிறயா?''

''என்னை வெறுமனே தொந்தரவு படுத்தாதே. நான் நாளைக்கு யாரையும் பார்க்கப் போறதில்லை... என்னைப் பொறுத்தவரையில் தீர்மானம் செஞ்சாச்சு.''

''என்ன தீர்மானம்?''

''ராகேஷைத்தான் நான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்.''

''பண்ணிக்கிறதா இருந்தா பண்ணிண்டு தொலையேன். அவன் படிச்சு முடியற மட்டும் வேணும்னு என்ன கணக்கு? நாளைக்கு ஏமாத்திட்டுப் போயிட்டான்னா யார்டி வயத்திலே நெருப்பைக் கட்டிண்டிருக்கிறது?''

'' அப்படியெல்லாம் அவர் ஏமாத்தமாட்டார். உன் காலத்திலே அப்படியெல்லாம் நடந்திருக்கலாம். இந்தக் காலத்திலே நடக்காது. நாங்கள்ளாம் படிச்சவா, ஏமாற மாட்டோம்.''

'' அவனோட அம்மா சண்டை போட்டுண்டு போனாளே, வந்துட்டாளா? அவ என்ன சொல்றா? சரின்னுட்டாளாமா?''

''தெரியாது.''

''என்ன தெரியாது. நாளைக்கு அவ இந்த கல்யாணம் நடக்க கூடாதுன்னு ஒத்தைக் கால்லே நின்னாள்னா?''

''அது நடக்காது...''

''எது நடக்காது? கல்யாணமா? என்னடி சொல்றே?''

''அவ ஒத்தைக் கால்லே நிக்க மாட்டா.''

''எப்படித் தெரியும் உனக்கு?''

''அவனோட அம்மா சம்மதிச்சுட்டா நீயும் சரி கல்யாணம் பண்ணிக்கோன்னு தலையாட்டியே. இவ பணக்கார வீட்டுக்கு மருமகளாய்ப் போய் அனுப்புகிற பணத்தை வைச்சுண்டா நாம குடித்தனம் பண்ணணும்? உனக்கு வெட்கமா இல்லையாம்மா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் உமா.

''நான் எங்கேடி சரின்னு தலையாட்டினேன்?''

''நேத்திக்கு இவ அந்தத் தடியனைக் கூட்டிண்டு ஆத்துக்கு வந்தது எனக்கு எவ்வளவு அவமானமா இருந்தது தெரியுமா?''

''உமா, உனக்கு என்ன வந்துடுத்து? ஏன் இப்படிப் பேசறே?'' என்று கேட்டாள் விஜயா.

''அப்பொல்லாம் அப்பா, இப்போ நீயா?''



''நான் என்ன பண்ணிட்டேன்? நான் இத்தனை நாளாச் சம்பாதிச்சுக் கொடுத்தது தப்பா? வாங்கின கடனை அடைச்சு உன்னைப் படிக்க வச்சு....''

''நான் சம்பாதிச்சுத் திருப்பிக் கொடுத்துடறேன். அவ்வளவுதானே?''

''நீ இப்படிப் பேசறது உனக்கு வெட்கமா இல்லே?''

''நான் எதுக்காக வெட்கப்படணும்? ராகேஷைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேங்கிறியே, அதுவும் அவனோட தங்கையைப் பார்த்தாலே அவனோட குடும்பப் பெருமை யெல்லாம் நன்றாத் தெரியறது. சிகரெட், இனம் ஒரு பாய் ஃப்ரெண்ட்... அவளுடைய அம்மாவோட யோக்கியதையைப் பத்தி அவ ஃப்ரெண்ட்லே சொல்லு... நான் எதுக்காக வெட்கப்படணும்?''

''நீ இப்படிப் பேசுவேன்னு நான் எதிர் பார்க்கவே யில்லே, உமா!'' என்றாள் விஜயா நிதானமாக.

அப்பொழுது பானு உள்ளே ஓடி வந்தாள். ''அக்கா... அந்த மாமா வந்திருக்கார்'' என்றாள் அவள்.

''எந்த மாமாடி?'' என்று கேட்டாள் அம்மா.

விஜயா வேகமாக வாசலுக்கு விரைந்தாள். ராகேஷ் நின்று கொண்டிருந்தான். அவன் முகம் வெளிறிப் போயிருந்தது.

''என்ன நடந்து விட்டது? ஏன் இப்படி இருக்கிறீர்கள்?'' என்றாள் விஜயா.

அவன் ஒன்றும் பேசாமல் உள்ளே வந்தான். அவனைப் பார்த்துவிட்டு முகத்தில் வெறுப்புத் தோன்றச் சமையலறையை நோக்கிச் சென்றாள் உமா. அம்மா ஒன்றும் புரியாமல் உமாவைப் பின் தொடர்ந்தாள். அவன் என்ன சொல்ல வந்திருக்கிறான் என்பது அவன் முகத்தைப் பார்த்தவுடனே விஜயாவுக்குத் தெரிந்து விட்டது.

ராகேஷ் நாற்காலியில் உட்கார்ந்தான். ''நான் ஆஸ்பத்திரியிலிருந்து வருகிறேன்.'' என்றான்.

''ஆஸ்பத்திரியிலிருந்தா?''





## எண்ணங்கள்

மனத்தில் எண்ணங்கள் பிறப்பதைப் பாருங்கள்! ஒரு சைக்கிளைப் பார்த்தவுடன் 'ஹெர்குலிஸ்' என்ற நினைவு எழுந்தது ! அது மறைய 'டார்ஜான்' என்ற நினைவு வந்தது ! அது மறைய 'அடர்ந்த காடு' என்ற நினைவு தோன்றியது ! அதுவும் மறையப் 'புலி' என்ற நினைவு எழுந்தது! அதுவும் மறைய 'பட்டௌடி நவாப்' என்ற நினைவும் வந்தது! (எண்ணத் தொடர்புகளைச் சிந்தியுங்கள்.)

எண்ணங்கள் தோன்றவும் - மறையவும் - இப்படி மனம் இடைவிடாது அலைகிறது !

ஒரு நினைவுக்கும் மற்றதற்கும் இடைப்பட்ட காலமே அமைதி !

'எண்ணம்-அமைதி' இதில் எது மனத்தின் அருகில் நிற்பது ? அமைதிதான் !

ஏன் ?

'எண்ணம்' பிறக்கிறது! அழிகிறது !

'அமைதி' பிறப்பதில்லை - அழிவதில்லை! இருக்கிறது. அதை வளர்ப்பது எப்படி ?

'ஓம் நமசிவாய' என்ற மந்திரத்தைத் தினம் சற்று நேரம் சொல்லிப் பாருங்கள்! எண்ணங்கள் எழுவதும் தாவுவதும் குறையும் - அமைதியின் இடைவெளி பெருகும் !

சுவாமி தயானந்த சரசுவதி கூறக் கேட்டு எழுதியவர். - கமலி மணாளன்.

---

''என்...அம்மாவின் 'பாடி' அங்கே....''

'' 'பாடி'யா ?'' மிகவும் சிரமப்பட்டுத் தனக்குத் தெரியாதது போல், குரலில் ஆச்சரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டாள் விஜயா.

''யாரோ கொலை செய்திருக்கிறார்கள்... அப்பா ஆஸ்பத்திரிக்கு வந்தார். போய்விட்டார். அஷோக்தான் மேலே நடக்க வேண்டிய காரியங்களுக்கு ஏற்பாடு செய்தான். அம்மாவை இனிமேல் தேட வேண்டாம். அம்மா போனது பற்றி நான் அவ்வளவு வருந்தவில்லை. ஆனால்.... கொலை... இது தான் எனக்கு எரிச்சலைத் தருகிறது.''

விஜயா பேசாமல் இருந்தாள்.

''நீ என்னுடன் வருகிறாயா?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தான் ராகேஷ்.

''எங்கே?''

'' என் வீட்டுக்கு. உன்னுடன்தான் என்னால் பேச முடியும். யார் கொலை செய்திருப்பார்கள் என்பதைக் கண்டு பிடித்தாக வேண்டும். என் அம்மா என்பதற்காக நான் சொல்லவில்லை. கொலை செய்வது என்பது ஒரு கண்ணியமற்ற காரியம்.''

''போலீஸில் என்ன சொல்லுகிறார்கள் ?''

''கழுத்தை ஒரு துணியினால் சுற்றி நெரித்துக் கொன்றிருக்கிறார்கள். துணி கிடைக்கவில்லை. அவள் மீது யாருக்கு அவ்வளவு ஆத்திரம் இருந்திருக்கும் ? பார்க்கப் போனால் எல்லாருக்கும்தான். அவளைக் கொலை செய்ய நினைக்காதவர்கள் மிகவும் குறைவு என்று நினைக்கிறேன்.... அப்படி நினைக்காதவர்கள் அவளைத் தெரியாதவர்களாக இருக்க வேண்டும்'' என்றான் ராகேஷ்.

''இறந்து போனவர்களைப் பற்றி அப்படியெல்லாம் பேசாதீர்கள்'' என்றாள் விஜயா.

''அவள் இருந்த போதும் பிரச்னை. இறந்த பிறகும் பிரச்னை.''

'' மிஸ்டர் கபூர் இதனால் எப்படிப் பாதிக்கப்பட்டிருக்கிறார் ? அவர் காரியம் நடந்த இடத்துக்கு வரவேயில்லையா ?''

''அஷோக் 'பாடி'யை வீட்டுக்குக் கொண்டு போக விரும்பவில்லை. ஆஸ்பத்திரியிலிருந்தே மயானத்துக்குக் கொண்டு போகலாம் என்றான். அப்பாவுக்கு ஃபோன் செய்த போது, அவர் தாம் வரவில்லை என்று சொல்லிவிட்டார். அவர் எப்படிப் பாதிக்கப்பட்டிருக்கிறார் என்பது புரியவில்லை. அம்மா இறந்தது, அவருக்கு ஓர் ஆறுதல்தான்.... ஆனால் கொலை என்பதுதான் எந்தக் கணவனாலும் ஜீரணித்துக் கொள்ள முடியாத விஷயம்.....'' என்றான் ராகேஷ்.

கபூர் தாம் கொன்றதாக ஒப்புக் கொண்டால், அது இவனுக்கு எப்பேர்ப்பட்ட அதிர்ச்சியாக இருக்கப் போகிறது! அதை இவனால் ஜீரணித்துக் கொள்ள முடியாது என்று தோன்றுகிறது. கபூர் தம்முடைய 'அந்தரங்கங்களை'க் காப்பாற்றிக் கொள்வதற்காக, செய்யாத கொலையையும் செய்ததாக ஒப்புக் கொள்ளப் போவது எப்பேர்ப்பட்ட முட்டாள்தனம் ! இந்தச் சந்தர்ப்பத்தில், உண்மையை இவனிடம் சொல்லிவிட்டால் என்ன? வாக்குறுதி கொடுத்திருக்கிறேன் என்ற என்னுடைய நாணயமா பெரிய விஷயம் ?

''போலீஸ் வீட்டுக்கு வந்து குடையப் போகிறார்கள்... போலீஸ் அதிகாரி ரவோஜா அப்பாவுக்கு நெருங்கிய சிநேகிதர். இருந்தாலும் அவர் கடமையைச் செய்தாக வேண்டும். சரி..... என்னுடன் புறப்படு.''

விஜயா உள்ளே சென்று புடவையை மாற்றிக் கொண்டாள்.

'' என்னடி அவனோட அம்மாவைக் கொன்னுட்டாளா?'' என்று கேட்டாள் அம்மா.

''ஆமாம்.''

'' இப்போ எங்கே கிளம்பறே ?''

''அவரோட வீட்டுக்கு.''

''கொலை நடந்திருக்கு..... அங்கே எதுக்குப் போறே ?''

விஜயா பதில் சொல்லவில்லை.

உமா கேட்டாள் : '' என்ன விஜயா, உனக்கு அறிவு மழுங்கிப் போச்சா ? இது நடந்தப்புறமுமா அவனைக் கல்யாணம் பண்ணிக்கிறதா இருக்கே?''

''அவர் என்ன பண்ணுவார்? அவர் கொலை பண்ணலையே ?''

''பண்ணியிருக்க மாட்டான்னு என்ன நிச்சயம் ?''

''பண்ணியிருந்தா இந்தாத்திலேதான் பண்ணியிருக்கணும். நேத்து ராத்திரி அவர் இங்கேதான் இருந்தார்.''

'' 'அலிபி'க்காகத்தான் கூட்டிண்டு வந்தியா ?'' என்று கேட்டாள் உமா.

விஜயா அவளை ஏறிட்டு நோக்கினாள். 'இதைவிட மட்டமாக உன்னால் பேச முடியாதா?' என்று கேட்பதுபோல் இருந்தது.

அவள் 'டிரஸ்' செய்து கொண்டு முதல் அறைக்குச் சென்ற போது, ராகேஷ் அங்கில்லை; போய்விட்டான்! (தொடரும்)

இன்னிக்கு என் இண்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ?
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனாஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது :** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது :** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



**சக்தி வாய்ந்த, நம்பகமான**

# அனாஸின்

## இந்தியாவின் புகழ் பெற்ற வலி–நிவாரணி

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd. A/2/8-74

## திறமை மிக்க திலகங்கள்

# எம். எல். வசந்தகுமாரி



ஸ்ரீமதி வசந்தகுமாரி ஒரு சம்பிரதாய மான சங்கீத குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருடைய தாயார் லலிதாங்கி அம்மாள் ஒரு சங்கீத உபாசகர். வெகு சுகமான சாரீரம். புரந்தரதாசர் கீர்த்தனைகளுக்குத் தமிழ் நாட்டில் நல்ல ருசியை உண்டாக்கிய பெருமை இவருக்கு உண்டு. கான்வெண்டுப் படிப்பில் ஒரு பக்கம் லயித்திருந்தாலும், தாயாரின் சுகபாவ சங்கீதத்திலும் லயித்து அவரையே ஆரம்ப குருவாக வைத்துப் பயின்றவர் வசந்தகுமாரி.

பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதிலேயே இவருக்கு முதல் மேடைக் கச்சேரிக்கு எதிர்பாராத வகையில் வழிவகுத்துக் கொடுத்தவர் லலிதாங்கி அம்மாள்தான்!

பெங்களூரில் லலிதாங்கி அம்மாளின் கச்சேரிக்கு ஏற்பாடாகியிருந்தது. கச்சேரிக்குச் சில மணி நேரங்களுக்கு முன் லலிதாங்கி அம்மாவுக்கு உடல் நலம் பாதிக்கப்பட்டு விட்டது. ஆனாலும் புரந்தரதாஸர் திருப்பணியை ஒட்டி ஏற்பாடு செய்த விழா என்பதால் கச்சேரியை ரத்து செய்யவும் மனம் இல்லை. ஆகவே தம் புதல்வியை அன்று மாலை, தம் இடத்தில் அமர்ந்து கச்சேரி செய்ய ஆசிர்வதித்தார். அதே சீனியர் பக்கவாத்தியக்காரர்கள். அன்றைய மாற்றுக் கச்சேரி பிரமாதமாக அமைந்தது. அந்தச் சந்தர்ப்பம் சங்கீத வானத்தில் ஒரு புதிய நட்சத்திரம் தோன்றவும் வழி வகுத்தது.

வசந்தகுமாரி அவர்களின் தகப்பனாரும் சங்கீதத் துறையில் மிகவும் ஈடுபட்டவர். அதைவிடப் பரம சங்கீத ரசிகர். தஞ்சாவூர் ஜில்லாக்காரராயிற்றே. அவரும், காலம் சென்ற சங்கீதமேதை ஜி. என். பாலசுப்பிரமணியத்தின் தகப்பனார் நாராயணசாமி அய்யரும் சிறந்த நண்பர்கள். இருவரும் தினசரி மாலை வேளைகளில் கடற்கரையில் உலாவப் போகும் போது சங்கீதத்தைப் பற்றித்தான் பேசுவார்கள். இதன் விளைவாகத்தான் வசந்தகுமாரி அவர்களுக்கு ஜி.என்.பி.யிடமும் சில காலம் சங்கீதம் பயில வாய்ப்புக் கிடைத்தது. அந்த வாய்ப்பைப் பரிபூரணமாகப் பயன்படுத்திக் கொண்டார். அத்துடன் தமக்கு என்று ஒரு தனிப் பாணியையும் வளர்த்துத் தம் குருவின் முத்திரையுடன் இணைத்துக் கொண்டார்.

இதிலே இன்னும் ஒரு விசேஷம் உண்டு. சென்னை சர்வகலாசாலையில் சங்கீதத்துக்கான டிப்ளோமா வகுப்புக்களை ஆரம்பித்த நேரத்தில் அங்கே ஆசிரியராக வந்து சேர்ந்தவர் சங்கீத மாமேதை டைகர் வரதாச்சாரியார். அவருடைய முதல் மாணவராகப் போய் அமர்ந்தவர் ஜி.என்.பி. டைகர் அவர்களின் வயோதிக காலத்தில் கலாக்ஷேத்திரத்தில் கடைசி மாணவராகக் கற்றுக் கொண்டவன் நான். ஜி.என்.பி. ஒரு பி. ஏ. (ஹானர்ஸ்) பட்டதாரி. நான் ஒரு பி. எஸ்ஸி. பட்டதாரி. டைகர் அவர்கள் வேடிக்கையா ''உங்களைப் போன்றவர்களுக்கெல்லாம் சங்கீதம் கற்றுக் கொடுக்க நான் 'ஸ்பெஷலாக இங்கிலீஷ்' கற்றுக் கொள்ள வேண்டும் போலிருக்கிறது என்பார். ஜி. என். பி. சில உருப்படிகளை டைகர் போலவே பிரமாதமாகப் பாடிக் காண்பிப்பார்.



பல ஆண்டுகளுக்கு முன் எம். எல். வி. அவர்கள் மேடைக் கச்சேரிகளை உற்சாகமாகச் செய்ய ஆரம்பித்த காலத்தில் நடந்த ஒரு விஷயத்தைச் சொல்கிறேன்.

கரூருக்குப் பக்கத்தில் உள்ள மாயனூரில் ஒரு கச்சேரி ஏற்பாடு செய்திருந்தார்கள். தேதி குறிப்பிட்டு அட்வான்சும் அனுப்பி விட்டார்கள்.

இவர் தேதியைக் கவனப் பிசகாக மறந்து விட்டார். கச்சேரி தினத்துக்கு முந்திய மாதத்திலேயே அதே தேதியில் பக்கவாத்தியக்காரர்களுடன் மாயனூரில் போய் இறங்கினார். இவர்களை வரவேற்க ரயிலடிக்கு யாரும் வரவில்லை. இவருக்குத் 'திக்' என்று இருந்தது.

சொல்பவர்: எம். டி. ராமநாதன்

## சர்வதேச ராமாயணம்

உலகின் பல்வேறு மொழிகளில் ராமாயணம் எந்தெந்த விதங்களில் யார் யாருடைய முயற்சியால் வெளியாகி யிருக்கிறது என்று ஆராய்ந்து ஒரு புள்ளி விவர அட்டவணைப் புத்தகம் (Bibliography) தயாரிக்கும் பொறுப்பு திரு ராதாகிருஷ்ண சர்மாவுக்குத் தரப்பட்டுள்ளது. சென்னைசாகித்ய அகாடமி நிர்வாகியே இவரிடம் இந்தப் பொறுப்பை ஒப்படைத்துள்ளது பெல்ஜியத்தின் தலைநகரில் இயங்கும் சர்வதேச வித்வத் ஸ்தாபனமான யூனியன் அகடமிக் இன்டர்நேஷனல்.



— பி.எஸ்.எம்.

நல்லவேளையாக அந்த ஊரிலிருந்த மின்சாரத் துறை இன்ஜினீயர் ஒருவர் தகுந்த தருணத்தில் உதவ முன் வந்தார். தம்முடைய சொந்த செல்வாக்கைப் பயன்படுத்தி, ஆற்றங்கரையின் அக்கரையில் இருக்கும் மோகனூரில் அன்று மாலையிலேயே ஒரு கச்சேரிக்கு ஏற்பாடு செய்தார். எதிர் பாராத நல்ல வரவேற்பு. சன்மானமும் கிடைத்தது. அதைக் கொண்டு சங்கீதக் குழுவினர் அடுத்த கச்சேரிக்காக மைசூரை நோக்கிப் புறப்பட்டனர் !

பக்கவாத்தியக்காரர்களுக்கு எம்.எல்.வி.யிடம் தேவதா விசுவாசம். தமக்குக் கிடைக்கும் வசதிகள் சௌகரியங்கள் எல்லாம் தம் கூட வருபவர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்பதில் கண்ணுயிருப்பார். அதேபோல் அவர்களின் குடும்ப நலன்களிலும் மிகுந்த அக்கறை காட்டுவார்.

**1964**ம் ஆண்டு டிசம்பர் மாதத்திலே கோயமுத்தூரில் எம். எல். விக்கு ஒரு கச்சேரி. அதை முடித்துக் கொண்டு தம் காரில் பக்கவாத்தியக்காரர்களுடன் சென்னைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். நள்ளிரவு, காஞ்சீபுரத்துக்கு அருகில் கார் வந்து கொண்டிருக்கும்போது, ஒரு பெட்ரோல் வாகன் மோதி விட்டது. முன் ஆசனத்தில் அமர்ந்திருந்த மிருதங்கம் கிருஷ்ணமூர்த்தி ராவின் கையிலிருந்த தம்புரா பொடிப் பொடியாகி விட்டது. அது மாத்திரமல்ல, அவருடைய இடதுபுறத்து விலா எலும்புகளில் ஆறு எலும்புகளில் கீறல் ! தொடர்ந்து சில மாதங்கள் வரை, கிருஷ்ணமூர்த்தி ராவ் அவர்களுக்குச் சென்னையில் கிடைக்கக்கூடிய அத்தனை உயர்தர மருத்துவ சிகிச்சைகளும் கிடைக்க எம். எல்.வி. ஏற்பாடு செய்து அவரை மீண்டும் பழைய கிருஷ்ணமூர்த்தி ராவாக மாற்றினர்.

மிருதங்கம் கிருஷ்ணமூர்த்திராவ், — எம். எல்.வி.யின் தாயார் லலிதாங்கி அம்மாவுக்கும் வாசித்திருக்கிறார். எம். எல். விக்கும் வாசிக்கிறார். அவ்வப்போது எம்.எல்.வியின் குமாரத்தி ஸ்ரீவித்தியாவின் இசைக் கச்சேரிகளுக்கும் வாசிக்கிறார்.

பம்பாய் ஷண்முகானந்தா அரங்கில் எம்.எல்.வியின் கச்சேரி. அதற்கு முந்திய தினம் நடந்த மதுரை மணி அய்யர் கச்சேரிக்கு மிருதங்கம் வாசிக்க வந்திருந்த பழனி சுப்பிரமணியபிள்ளை பம்பாயில்தான் இருந்தார். ஆனால் எங்கோ நண்பர்களைச் சந்திக்கப் போய்விட்டதால், எம்.எல்.வி.யின் கச்சேரிக்கு வர இயலவில்லை.

அன்றையக் கச்சேரியில் எம். எல். வி. எட்டு கலை சவுக்கத்தில் ஒரு பல்லவி பாடியிருக்கிறார். அமர்க்களமாய் அமைந்துவிட்டது. கச்சேரி முடிந்தவுடன் இந்த விஷயம் பழனி சுப்பிரமணிய பிள்ளை காதுக்கு எட்டியது. அவர் உடனே, கச்சேரி முடிந்து தம் ஜாகைக்குத் திரும்பிய எம்.எல்.வி.யைப் போய்ப் பார்த்து, அதே பல்லவியை மீண்டும் பாடச் சொல்லிக் கேட்டு ரசித்துப் பாராட்டினர் !

திருமதி எம். எல். வி. எப்படி அந்த நாட்களில் எதிர்பாராமல், லலிதாங்கி அம்மா பாடவேண்டிய சந்தர்ப்பத்தில் தாம் அமர்ந்து பாடித் தம் வருங்கால பிரசித்தத்துக்கு வழி கோலினரோ, அதே மாதிரி ஒரு வாய்ப்பு எனக்கும் கிடைத்தது. அதுவும் எம்.எல்.வியாலேயே !

இருபது வருஷங்களுக்கு முன்னுல் என்று நினைக்கிறேன். அதுவரை சென்னை அகாடமி கச்சேரியில் எனக்குப் பகல் நேர சான்ஸ் தான் கொடுப்பார்கள். சீசனில் ஒரு நாள் மாலைக் கச்சேரிக்கு எம். எல்.வி.யை ஏற்பாடு செய்திருந்தார்கள். அன்றைய இரவு கச்சேரிக்குத் துவாரம் வேங்கடசாமி நாயுடு வாசிக்கவிருந்தார்.

அன்று எதிர்பாராமல் எம்.எல்.வி.க்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டது. அவரால் இந்நிகழ்ச்சியில் பங்கு கொள்ள முடியவில்லை. நிர்வாகிகள், துவாரம் அவர்களை மாலை நேரத்துக்கு மாற்றினர்கள். இரவு நேரக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமே!

முன்னிரவு நேரம். நான் வீட்டிலிருந்து கலாக்ஷேத்திராவுக்கு ஒரு கதகளி நிகழ்ச்சி பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தேன். அவசரம் அவசரமாக டி. என். கிருஷ்ணனும் ரகுவும் என்னைத் தேடி வந்தார்கள். அன்றைய இரவுக் கச்சேரிக்கு என்னைப் பாடும்படி வற்புறுத்தினர்கள். நான்கூடக் கொஞ்சம் பிகு பண்ணிக் கொண்டேன். அப்புறம் அவர்கள் இஷ்டப்படி பாட ஒப்புக் கொண்டேன். அன்றைய இரவு, வானொலி என் முழுக் கச்சேரியையும் ஒலிபரப்பியது.

நான் அந்த நாளை என் வாழ்க்கையில் ஒரு திரும்புமுனையாக இன்றும் நினைக்கிறேன். எதிர்பாராத வாய்ப்பு. எனக்குப் பலத்தையும் பலனையும் தரக் கூடிய வாய்ப்பாக எம். எல்.வியால் அமைந்தது.

பழகுவதற்கு மிகவும் இனிய சுபாவம் உள்ளவர். சரளமாகச் சம்பாஷிக்கும் திறனுள்ளவர். ஒரு சங்கீத ரசிகரான திரு கிருஷ்ணமூர்த்தியைக் கணவராக அடையும் அதிருஷ்டம் செய்தவர்.

கேட்டு எழுதியவர்: **சோமதில்ஸ்வாமிநாதன்**


OKASA
THE 20TH CENTURY TONIC
RESTORATIVE
OKASA CO. PVT. LTD. BOMBAY
HORMO-PHARMA LTD.
LONDON-BERLIN




# அவளுக்கு மட்டும்

அன்புக்குரியவளே,

உன் கடிதங்கள் எனக்குக் கிடைத்தன.

அவை எழுப்பியுள்ள கேள்விகளுக்கு உனக்கு மட்டும் நான் பதில் சொன்னால் போதாது. எனவே அதைப் பகிரங்கமாக்குகிறேன்.

எனது எழுத்துக்கள் மிகவும் சோகமயமாக இருப்பதாகவும் அது ஏனென்று உனக்குப் புரியவில்லை என்றும் வருந்தியிருக்கிறாய்.

உண்மையில் நான் அளவற்ற சோகத்திலும் மிதக்கவில்லை; முழு நிம்மதியிலும் இல்லை.

இரண்டுக்குமிடையே ஒரு மயங்கிய நிலை.

மகிழ்ச்சிக் கவிதைகளைவிட, துயரக் கவிதைகளே பலரது வாழ்க்கையோடு ஒத்திருக்கின்றன.

கவிதைகள் நிலைபெறுவதற்குக் கண்ணீர் துணை புரிகிறது.

இயற்கையாக அழ முடியாவிட்டாலும் செயற்கையாகவாவது அழுவது சிந்தனைக்கு வளம் தருகிறது என்பது என் அனுபவம்.

நாட்டியத்துக்குப் பாட்டெழுதுவதை விட நலிந்து போனவனுக்கு எழுதுவதிலே ஒரு சுகம் இருக்கிறது.

ஈசுவரனின் முன்னால் சிரித்துக் கொண்டு உட்கார்வதை விட அழுது கொண்டு உட்கார்வதில் ஓர் அமைதி இருக்கிறது.

இவையெல்லாம் என் பலவீனத்தையா காட்டுகின்றன?

இவை பலவீனம் என்றால் ஒவ்வொரு மனிதனும் பலவீனனே.

எனக்கு மரண பயம் இல்லை.

கடக்க முடியாத, தடுக்க முடியாத ஒன்றை எண்ணி நான் ஏன் பயப்பட வேண்டும்?

காலத்தின் விதிக்கோடு எங்கே முடிகிறதோ, அங்கே முடியட்டும்.

பிறப்பனவெல்லாம் இறக்கும் என்றால், இறப்பனவெல்லாம் பிறக்கும் என்பது இந்து தர்மம்.

'இறைவா என்னை மறுபடியும் பிறக்க வைக்காதே' என்று துதித்தார் பட்டினத்தார்.

நானோ மறுபடியும் பிறக்க ஆசைப்படுகிறேன்.

அதனால்தான் மரணத்தை அழைக்கிறேன். அதைக் கண்டு பயப்படவில்லை.

நான் சில எல்லைகளைக் கடந்த பிற்பாடு நீ என்னைச் சந்தித்திருக்கிறாய். இந்தச் சந்திப்பும் எனது காலத்தின் சாலையில் ஒரு மைல் கல்லே!

'அன்பு காட்டும் உள்ளத்தில் அனுதாபமும் பிறக்கிறது' என்பதற்கு நீ ஓர் எடுத்துக்காட்டு.

ஆகவே, என் எழுத்துக்களில் சிறிய துயரம் தொனித்தால்கூட உனக்கு அது பெரிதாகத் தோன்றுகிறது.

இங்கேயோ வெண்ணெய் உருகி வெகு நாட்களாகி விட்டது. இனி அது வெண்ணெய் ஆக முடியாது.

ஒரு காலம் மகிழ்ச்சிக்கு உரியதாகவும், ஒரு காலம் துன்பகரமாகவும் மாறுவது இயற்கை.

ஆனால் எனது தருமம் துன்பங்களினால் மரத்துப் போய்விட்டது.

கல்லிலே தேனை ஊற்றினால் அது குடிக்கவா போகிறது!

இன்பங்கள் வருகின்றன; ஆனால் இதயம் அவற்றை ரசிக்கவில்லை.

துன்பங்கள் எழுதத் தூண்டுகின்றன; ஆகவே அவற்றை நான் மறக்கவில்லை.

எனக்காக வாழக்கூடிய ஓர் உயிராக நீ உன்னைக் கருதுகிறாய்; நல்லது.

கனவில் தோன்றும் காட்சிகளைப் புகைப்படம் பிடிக்க முடியாது.

காரிய சாத்தியமில்லாத சிந்தனைகள் காலத்தை வீணாக்குகின்றன.

''தேங்கிக் கிடக்கும் குட்டையில் நீர் குடிக்கும்போது, அதைக் கலக்கி விடாமல் ஜாக்கிரதையாகக் குடிக்க வேண்டும்'' என்றார் பகவான் ராமகிருஷ்ணர்.

என்னைப் பொறுத்தவரையில் உன் நிலையும் அதுவே.

காய்ந்த நதியில் மீண்டும் வெள்ளம் வரும்போது என் கரையில் உன்னை எதிர்பார்ப்பேன்.

இப்போதோ என் கரையில் உள்ள நாணல்களைக் காப்பாற்றுவதே என் பணி.

கள்ளிக் காட்டில் பழகிவிட்ட என்னால், முல்லைக் கொடிகளை உணர முடியவில்லை.

விரக்தியும் வேதாந்தமும் நான் விரும்பி ஏற்றுக் கொண்டவையல்ல, அவை என்னைத் தேடி வந்தன.

'தத்துவ ஞானமே அங்கிருந்துதான் உதயமாகிறது' என்கிறது ஞானக் கோவை.

அது துயரங்களின் மூலம் இறைவன் எனக்கு அளித்த பரிசு.

என் அன்புக்குரியவளே,

முப்பது வருஷங்களுக்கு முன் என்னை நீ சந்தித்திருந்தால், நீயே அதற்குக் காரணமாக இருந்திருக்கலாம்.

இப்போது அதற்கென்று வேறு சிலர் இருக்கிறார்கள்.

எனினும் உன் வேண்டுகோளின்படி உலகத்தையும், உழைப்பையும் உற்சாகப்படுத்தவும், புதுமை உணர்ச்சிகளை அங்கீகரிக்கவும் நான் முயல்வேன்.

இயற்கையாக முடியாவிட்டாலும் செயற்கையாகவாவது முயல்வேன்!

எல்லாம் உனக்காக.

காரணம், உன் எழுத்தின்படி நீ வாழ்வது எனக்காக.

அன்புள்ள "**கண்ணு**"

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

